SANTOSH KUMAR MUKHERJI'S

# குழந்தைக்கட்டி

என்னும்

## ஈரல்பெருக்கம்

Translated in Tamil and adopted for use of General Public.

ஆக்கியோன்

M. A. கிருஷ்ண ஐயர், எல். எம். பி.

Presented by Mr T.G. Krishnaswami Pillai along with Secret of the world in exchange for 1 copy of Arungalachappa
5-4-42

வெளியிட்டது :

T. G. கிருஷ்ணசாமி பிள்ளை

நாச்சியார்கோவில்.

காபிரைட்] 1924 [விலை ரு. 1—4.

# குழந்தைக் கட்டி
## என்னும் ஈரல் பெருக்கம்.



**நமது** இந்தியா தேசமாகிய பரதகண்டத்திற்கு மாத்திரம், தோன்றி வருகிறதும், சுரத்துடன் கூடிய ஈரல் (பித்தாசயம்) பெரிதாவதும், சாதாரணமாக ஆறு மாதத்திற்கு மேலும், மூன்று வயதிற்குட்பட்டும், குழந்தைகளுக்கு மாத்திரமுண்டாகக் கூடியதும் ஆன இந்த வியாதியைத் தான் குழந்தைக் கட்டி என்றும், கட்டி என்றும், பாற் கட்டி என்றும், பின்னும் பலவிதப் பெயர்களுடனும் வழங்கப்படுகிறது. இந்த ஈரல் பெருக்க வாரம்பித்துச் சின்னாட் கழிந்து சுருங்கிப்போவதால்தான், இதற்கு (Cirrhosis) என்று ஆங்கில வைத்தியத்தில் வழங்கப்படுகின்றது. இவ் வியாதியின் சரித்திரம்:—

இவ் வியாதியைப்பற்றி ஆயுள்வேதவைத்ய சாத்திரங்களில் எனக்குத் தெரிந்தவரையில் யாதொன்றுமே கூறப்படவில்லை. இதனுலேயே அநேக வைத்யர்கள் இவ் வியாதி புதிதாய்த் தோன்றி முளைத்திருக்கிறதென்று சொல்லி வருகிறார்கள். ஆனால் இவ் வியாதியின் அறி, குறி முதலிய சின்னங்களையும், அதன் குணதிசயங்களையும், நன்றாய் ஆராய்ந்து அலசிப் பார்த்து, ரோகவிக்ஞானம் செய்து இதை ஒரு தனிப்பட்ட வியாதியாகப் பிரித்துச் சொல்லப்படவில்லை என்றே சொல்லலாம்.

1887-ம் ஆண்டில் டாக்டர் B. C. ஸென் என்ற ஆங்கில வைத்யர், கல்கத்தா மெடிகல் ஸொஸைட்டி என்ற வைத்ய நிபுணர்களின் சங்கத்தில் "குழந்தைகளின் ஈரல் பெருக்கம்" எனும் விஷயத்தைப்பற்றி முதன் முதலாக ஒரு அரிய உபந்நியாசம் வாசித்துளார்.

அதற்கடுத்த ஆண்டில் அதே வைத்யர்கள் குழுமியுள்ள அந்தக் குழாத்திலேயே, டாக்டர் J. B. கிப்பன்ஸ் என்பவர் இந்த வியாதியால் இறந்த குழந்தைகளின் அவயவங்களின் மாறுதல்களைப்பற்றி விரிவாய்ச் சொல்லியிருக்கின்றார். பின்னும் இதே விஷயமாக அடிக்கடிப் பற்பல உபந்நியாசங்கள் வெளியிடப்பட்டுள. ஆனால் விஷயமிவ்வாறிருந்தும், இவ்வியாதியின் சரியான காரணம் யாதா யிருக்கலாமென்றும், இதற் கேற்பட்ட சரியான சிகிச்சை என்னவென்றும் சொல்லப் பட்டதில்லை. வைத்ய கிரந்தத்தில் மகா நிபுணரெனப் பெயர்வாய்ந்த, காஸ்ட்டலானி என்பவர் இப்படியு மொரு வியாதி யுண்டாவென்றும்? "கலா அஸார்" என்னும் பெயருடைய ஒருவகை முறைக் காய்ச்சலின் வகுப்பைச் சேர்ந்ததல்லவா என்றும் சந்தேகிக்கிறார்? பல நூற்றாண்டுகளாக எல்லா கேஸ்களும் நமது சிகிச்சைக்கு வராவிட்டாலும் கூட நம் பார்வைக்கு வந்த குழந்தைக் கட்டி என்ற வியாதியைப்பற்றிய ஆராய்ச்சியை வெகு கவனமாய்ச் செய்து வந்தோம். ஆனதால் கைதேர்ந்த ஆங்கில வைத்தியர்களும், காளிகட்டமெனும் கல்கத்தா கவிராஜர்களும், சிகிச்சைசெய்து வந்த வழிமுறைகளைப்பற்றி ஊன்றிக் கவனிக்க ஹேதுவாயிற்று. எங்கள் அநுபவத்தையும் கீழே தருகிறோம்:—இவ்வியாதியின் காரணம் முதலியவைகள்:—

சாதாரணமாய் கண்டு வருமிடங்களாகிய, வங்காள மாகாணம் சென்னைமாகாணத் தென் ஜில்லாக்கள், பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த கானரா ஜில்லா, பம்பாய் நகரம், ஐக்கியமாகாணம், என்றவிடங்களில்தான், இவ்வியாதி யுற்பத்தியாய்க்கொண்டு வருகிறது. நாட்டுப்புறத்தைவிட கல்கத்தாவைப்போலுள்ள நாகப்பட்டினத்திற் கொப்பான நகரத்திலும் அதன் நெருங்கிய உட்பட்டணங்களிலும் தான் விசேடமாய் இவ்வியாதி காண்கின்றது.

## "சாதிக்கிரமம்."

ஆங்கிலோ இந்தியர்களையும், முஹம்மதியர்களையும் விட மிகவும் அதிகமாக ஹிந்துக்களில்தான் இது காணப்படுகிறது. கல்கத்தா

வில் கட்டியினுல் காலஞ்சென்ற சிசுக்களின் கணக்கை எடுத்துப் பார்த்ததில், மற்ற வகுப்புகளி லிறந்தவர்களைவிட, ஹிந்து குழந்தை களில்தான் ஜாஸ்தியாக மரித்திருக்கின்றன வென்றும் தெரிய வருகிறது.

## ஐவேஜியும் அந்தஸ்தும்.

தாய்ப் பாலைத் தவிர்த்து, வேறு யாதொன்றையும், வாங்கிக் கொடுக்கத்தக்க ஐவேஜியில்லாத அரை வயிற்றுக்குக்கூட இழுப்பும் பறிப்புமாய் உணவூட்டி வரும் ஏழை வீட்டுக் குழந்தைகளைவிட, அமித ஆகாரத்தைத் தலையணைக்குப் பஞ்சு திணிப்பதுபோல், ஆசை யுட னறிவின்றி அளித்துவரும் பணக்கார வீட்டுக் குழந்தைகளே இவ் வியாதியால் மிகவும் பீடிக்கப்பட்டு வருகின்றன. சிறு பிராய மான சிசுப்பருவம் முதற்கொண்டே அரிசி, கஞ்சிச் சோறு முத லியவைகளை யூட்டி வளர்த்து வரும் பரம ஏழைகளின் குடிசை களிலும், இவ்வியாதி யில்லையென்று சொல்வதற்கில்லை.

வர்க்கம்:—[Sex] நமது 48 கேஸ்களில் 28 ஆண் குழந்தை களும், 20 பெண் குழந்தைகளு மிருந்தன.

முதல் குழந்தையும் 4, 5, பெண் குழந்தைகளுக்குப் பிற்பட்டு பிறக்கும் ஆண் குழந்தையு ், இவ்வியாதியினுல் பெரும்பாலும் பீடிக் கப்படுகிறதாய்த் தெரிகிறது. வீட்டில் முதன்முதலில் பிறந்த ஆண் குழந்தையும், 4, 5 பெண் பிறந்ததன் பிறகு பிறந்த ஆண்குழந்தை யும், இவ்வியாதியால் பெரும்பாலும் பீடிக்கப்படுகிறதாய்த் தெரி கிறது. ஒரு வீட்டில் முதல் ஆண் பிள்ளையையும், 4, 5 பெண் பிறந்த பிறகு ஏற்பட்ட ஆண் குழந்தையையும், மிகமிக வாஞ்சை யுடனும், அருமையுடனும், நேசித்து, அதைத் தங்களின் குடும்ப குலதெய்வத்தைப் போல் பூசித்துக் கொண்டாடி, அதற்கு அநாவசிய மான ஆகார பதார்த்தங்களைக் கொடுத்து, அதன் வயிற்றைக் கெடுத்து வருவதே இதற்கு முக்கிய காரணமாயிருக்கும்.

## வயதுக் கிரமம். [Age]

பால்கட்டி என்கிறதானது சிசுக்களைப் பாதிக்கும் ஒரு வியாதி. அநேகமாக ஆறு மாதத்திற்கு மேற்பட்டு இரண்டாண்டுக்குள்ளாகவே தான், இவ்வியாதி ஆரம்பிக்கிறது. அதாவது சிசுவிற்குப் பல் முளைக்கும், சமயத்திலும், அதன் தாய் மறு கர்ப்பவதியாகும் காலத்திலும், 7 கேஸ்களில் குழந்தைக்கு ஓராண்டு கழியுமுன்னரே தாய் மறுபடியும் கர்ப்பவதியாயிருக்கிறாள். 6 மாதத்திற்குள்ளேயோ 3 வயதிற்கு மேற்பட்டோ கட்டி என்ற வியாதி வருவது மிகவும் துர்லபம். ஆறு மாதத்திற்குள்பட்ட சிசுக்களுக்கு கட்டி வந்திருக்கும் கேஸ்களில், அக்குழந்தைக்குப் பசுவின்பால், பார்லி, அரிசி இவைகள் ஜனன கால முதலே கொடுத்து வந்ததாய்த் தெரிகிறது. தாய்ப் பால் அநேகமாக அக்குழந்தைகளுக்கில்லை யென்றே சொல்லலாம். ஆனால் ஆறு மாதத்திற்குமுன் உண்டாகும் கட்டி பால் கட்டி அல்லவென்றும், ஜனனகாலத்திலேயே அக்குழவிக்குப் பித்தசலம் வரும் குழாய் அடைபட்டிருக்க வேண்டுமென்றும் சொல்கிறார்கள். அப்படியாயின் அக்குழவிக்குப் பிறந்த சில நாட்களுக்குள்பட்டே இக்கட்டி ஏற்படுகிறது.

48 கேஸ்களில் வியாதி முதலில் கண்ட வயதுக் கிரமம்.

| முதலில் கண்ட வயது. | கேசுகளின் எண்ணிக்கை. |
|---|---|
| 3 முதல் 6மீ வரையில் | 2 |
| 6 ,, 12மீ ,, | 27 |
| 1 வயது முதல் 2 வரையில் | 16 |
| 2 ,, 3 ,, | 3 |
| | ஆக 48. |

# கல்கத்தா நகரத்தில் கட்டியினுலிறந்த குழந்தைகளின் 1908-வது வருட முதல் உள்ள கணக்கு.

| | ஜாதி | | | | | | | | | | வயதுகிரமம் | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஹிந்து. | | முகம்மதியர். | | இந்தியரல்லாதாரும் ஆங்கிலோ இந்தியரும். | | சுதேச கிறிஸ்துவர்கள். | | இதர வகுப்புகள். | | ஒருவயதிற்குக்கீழ். | | | | ஒருவயதிற்குமேல் ஐந்துவயதிற்குள். | | | | ஐந்துவயதிற்குமேல் 10 வயதிற்குள். | | | | கூடுதல் |
| | | | | | | | | | | | ஆண். | | பெண். | | ஆண். | | பெண். | | ஆண். | | பெண். | | |
| வருடம் | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | மரணம் | நூற்றிற்கு | |
| 1908 | 596 | 82 | 124 | 17 | ... | ... | 2 | .27 | 5 | .68 | தகவல் கிடைக்கவில்லை. | | | | | | | | | | | | 727 |
| 1909 | 549 | 84 | 100 | 15 | 1 | .15 | ... | ... | 1 | .15 | | | | | | | | | | | | | 651 |
| 1910 | 526 | 82 | 105 | 16 | ... | ... | 2 | .31 | 6 | .93 | | | | | | | | | | | | | 639 |
| 1911 | 571 | 83 | 112 | 16 | ... | ... | ... | ... | 3 | .43 | | | | | | | | | | | | | 686 |
| 1912 | 620 | 84 | 110 | 15 | 1 | .14 | ... | ... | 5 | .67 | | | | | | | | | | | | | 736 |
| 1913 | 598 | 80 | 142 | 19 | 1 | .13 | ... | ... | 2 | .26 | 101 | 14 | 91 | 12 | 286 | 38 | 253 | 34 | 8 | 1 | 4 | .53 | 743 |
| 1914 | 447 | 79 | 113 | 20 | ... | ... | 2 | .35 | 4 | .70 | 84 | 14 | 66 | 12 | 222 | 39 | 183 | 32 | 6 | 1 | 5 | .88 | 566 |
| 1915 | 411 | 83 | 88 | 17 | ... | ... | 3 | .59 | 1 | .19 | 72 | 14 | 67 | 13 | 189 | 38 | 168 | 33 | 6 | 1 | 1 | .19 | 503 |
| 1916 | 329 | 82 | 65 | 16 | ... | ... | 2 | .50 | 3 | .75 | 57 | 14 | 46 | 12 | 153 | 38 | 141 | 35 | ... | ... | 2 | .50 | 399 |
| 1917 | 424 | 87 | 57 | 12 | 4 | .82 | 4 | .82 | ... | ... | 70 | 14 | 50 | 10 | 189 | 39 | 172 | 35 | 5 | 1 | 3 | :61 | 489 |
| 1918 | 439 | 86 | 64 | 13 | 3 | .59 | 2 | .39 | ... | ... | 78 | 15 | 46 | 9 | 188 | 37 | 185 | 36 | 7 | 1 | 4 | .79 | 508 |
| 1919 | 471 | 83 | 94 | 16 | 1 | .17 | 1 | .17 | ... | ... | 85 | 15 | 66 | 12 | 211 | 37 | 196 | 34 | 7 | 1 | 5 | .87 | 570 |
| 1920 | 476 | 85 | 79 | 14 | 3 | .53 | 3 | .53 | ... | ... | 82 | 15 | 73 | 13 | 235 | 42 | 159 | 28 | 7 | 1 | 5 | .89 | 561 |

கல்கத்தாவில் இவ்வியாதியினால் இறந்த குழந்தைகளின் கணக்கெடுத்துப் பார்த்ததில் அநேகமாக அவைகள் ஒன்பது மாதத்திற்கு மேற்பட்டும், இரண்டாண்டுக் குள்பட்டும் உள்ளவைகளாகவே யிருக்கின்றன. 1907-ம் ஆண்டு 29 மரணம் 6 மாதத்திற்குள்ளும், 138 மரணம் இரண்டு வயதிற்குள்ளும் நடந்திருப்பதாய்த் தெரியவந்தது. இரண்டு வயதிலிறந்த குழந்தைக்குப் பெரும்பாலும் அச் சிசு நீண்ட காலம் இந்த ரோகத்திற்குள்ளாகி யிருக்கிறதென்றே சொல்லலாம்.

## 1907-ம் ஆண்டுக் கணக்கு.

| வயது. | ஹிந்து. | | முகம்மதியர். | | கூடுதல். |
|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | ஆண் | பெண் | |
| மூன்று மாதத்திற் குள்பட்டது | 2 | ... | ... | ... | 2 |
| ஆறு ,, ,, | 14 | 7 | 2 | 2 | 25 |
| ஒன்பது ,, ,, | 12 | 10 | 3 | 4 | 29 |
| பன்ரெண்டு ,, ,, | 15 | 7 | 6 | 8 | 36 |
| பதினைந்து ,, ,, | 52 | 44 | 19 | 12 | 127 |
| பதினெட்டு ,, ,, | 14 | 12 | 1 | 4 | 31 |
| 21 (இருபத்தொன்று) ,, | 83 | 71 | 11 | 9 | 174 |
| 24-மாதத்திற் குள்பட்டது | 29 | 30 | 7 | 8 | 74 |
| 24-மாதத்திற்கு மேற்பட்டது | 55 | 45 | 20 | 18 | 138 |
| கூடுதல். | 276 | 226 | 69 | 65 | 636 |

Statement Since 1908. Returns for 1907.

இவ்வியாதி சர்வ சாதாரணமாயிருந்தும், சென்னை முன்சிபாலிட்டியில் கட்டியினலிறந்த குழந்தைகளின் கணக்குவைத்திருப்பதாய்த் தெரியவில்லை.

## கட்டியின் காரணங்கள்,

அடிக்கடி பல காரணங்கள் இக்கட்டிக்கு உண்டென்றே சொல்லிக்கொண்டு வருகிருர்கள்.

## Alcoholism in parents.

குடிப்பழக்கமுள்ள தாய் தந்தையர்கள்.

மது வருந்தும் தாய் தந்தையர்கள் அதை அநுஷ்டிப்பதனல் அவர்களுக் குற்பத்தியாகும் சிசுக்களுக்குக் கட்டி வருவதற்கேதுவாகின்றதெனப் பலரும் நினைத்துவந்தார்கள். ஆனல் எங்கள் கணக்கில் வரும் குழந்தைகளின் பெற்ருேர்கள் யாருமே குடிப்பழக்கமுடையவர்களல்ல. இம்மட்டுமா ? மதுவருந்துவோர்க்கும் அல்லாதார்க்கும் பிறக்கும் சிசுக்களுக்கும் இக்கட்டி உற்பத்தியாவதால் இதை ஒரு முக்யகாரணமாய்க்கொள்ளலாகாது. இது மாத்திரமல்ல. ஈரல் வழக்கத்திற்கு மேல் பெருத்திருக்கிறதைத் தவிர அந்த உறுப்பில் ஏற்படும் மாறுதல்கள் மதுப்பழக்க முள்ளவன் ஈரலில் இருக்கும் மாறுதல்களுக்கு வித்தியாசமாகவேயுள.

## Congenital Syphillis.

கர்ப்பத்திலேயே ஊறிப்பிறந்த பரங்கிப்புண்.

பெற்ருேர்களான தாய் தந்தையர்க ளிடமிருந்து கர்ப்போற்பத்தி காலத்திலேயே சம்பாதித்துக் கொண்ட பரங்கிப்புண் என்ற வியாதியில் சம்பந்தப்பட்டதினலேயே இவ் வியாதி யுற்பத்தியாகிறதென்றும், சந்தேகிக்கிருர்கள் ? பாற்கட்டியைப்போல் இவ்வியாதியிலும், ஈரல் பெரிதாய்த்தான் ஆகின்றதென்பதற்கு யாதொரு ஆட்சேபனையுமில்லை.

ஆனல் கட்டிக்கு இரத்தப் பரிசோதனையினல் பரங்கிப்புண் என்ற வியாதிக்குச் சம்பந்தமான அறிகுறிகளைக் காணக்கூடவில்லை. இக் குழந்தையின் பெற்றோர்களுக்கு மேற்சொன்ன பரங்கிப்புண் என்ற வியாதி இருந்ததாய்க்கூட அவர்களின் சரித்திரங்கள் சொல்லவில்லை. இது மாத்திரமல்ல. கர்ப்பத்திலேயே ஊறிப்போன பரங்கிப்புண் என்ற வியாதியினலேற்படக்கூடிய இதர யாதொரு சின்னங்களையும் இக் குழந்தைகளிடம் காணக்கூடவில்லை. ஆனதால் சிபிலிஸ் என்ற பரங் கிப் புண் வியாதியினலேற்பட்ட அல்லது ஏற்படக்கூடிய கட்டியும் ஒன்று தானென்று சொல்வதற்கில்லை.

3. மலேரியா வேனும் முறைசுரம் முறைக்காய்ச்சலினுடைய ஒரு பிரிவுதான் இந்த வியாதியுமென்று ஒரு சித்தாந்தம் உண்டு. ஆனல் இது முறைசுர சம்பந்தமானதல்ல வென்று பின்வரும் காரணங்களால் வெளியாகின்றது:—1. முறைக்காய்ச்சல் சாதாரணமாகக் குங்கிராமங்களிலும், நாட்டுப்புறங்களிலும் கண்டு வருகிறது. குழந் தைகளின் கட்டி கல்கத்தா, சென்னை முதலியவைகளைப்போ லொத்த பெரிய நகரங்களில்தான் ஏற்படுகிறது. முறைக்காய்ச்ச லென்பது வெகு நாட்பட்ட வியாதி. கட்டி உண்டாகியுள்ள குழந்தை களுக்கு முறை சுரத்திற்கு மாத்திர மேற்பட்ட யாதொரு அடையா ளத்தையுமே காட்டக்காணேம். கட்டி என்ற ஒரு வியாதியினல் பீடிக்கப்பட்ட சிசுக்களின் இரத்தத்தைப் பரிசோதன மூலம் பார்த்த தில் முறைசுரத்தின் அணுக்கள் ஒன்றிலுமே காணப்படவில்லை. ஆனதால் முறை சுரத்தைச் சார்ந்ததல்ல வென்று தாராளமாய்ச் சொல்லலாம்.

4. Kala-zar—கலா அஸார் (ஒருவகை முறைசுரம்) பிரக்யாதி பெற்ற "காஸ்ட்டலானீன் (Castillani) கட்டி இந்த சுரவகுப்பைச் சார்ந்ததென்பதற்குள்ள ஒரு வியாதியேயென்று சந்தேகிக்கிருர். இரண்டு வியாதிகளுக்கு முள்ள மாறுபட்ட விவரங்களைக் கீழே தரு கிரேன்:—கட்டி சாதாரணமாய் ஒன்றிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிசுக்களுக்குப் பெருப்பாலும் கண்டு வருவது வழக்கமா யிருக்கிறது.

இந்த ஜ்வரம் இதே வயதில் வருவது மிகவுந் துர்லபம். கட்டி சில மாதங்களுக்குள் சொஸ்தமாவதும் ஆகாததும் தெரிந்துவிடுகிறது. இந்தக் காய்ச்சல் பல வருடம் துடர்ந்துகொண்டே யிருக்கிறது. இவ்விரண்டு வியாதிகளிலும் சுவரொட்டி ஈரல் ஆகிய இரண்டு உறுப்புகளுமே பருத்திருக்கின்றது. ஆனால் இந்த ஜுரத்தில் கட்டிக் கிருப்பதைவிட சுவரொட்டி மிகவும் பெரியதாகவே யிருக்கின்றது. இரத்தப் பரிசோதனையில் இவ்விரண்டு வியாதிகளின் இரத்தத்திலும் வித்தியாசம் உள. ஆனதால் இவ்வியாதி கலாஸாரென்ற வர்க்கத்தைச் சேர்ந்ததல்ல.

## அணுவிலிருந்துண்டாகும் வியாதி.

குடலிலிருக்கும் வியாதியினால் அணுக்கள்மூலம் பித்தக் குழாய்களின் வழியே ஈரலைப் பாதிக்கப்படும் வியாதி யென்று பலருடைய சித்தாந்தம். டாக்டர் டி. எப். பியர்ஸ் என்ற கல்கத்தா நகர சுகாதார உத்தியோகஸ்தரும் இந்த அபிப்பிராயத்தைச் சார்ந்தவரே; இவ்வியாதி பெட்டிப்பால் முதலிய நமது தேசத்திலுபயோகப்படுத்தி வரும், அந்நிய ஆகார பதார்த்தங்களைக் கொடுத்து வளர்த்துவரும் குழந்தைகளுக்கு வருவதனால் பெரியதொரு ஆகார வித்தியாசத்தினால் இவ் வியாதி வருகிறதென்றும் சொல்ல முடியவில்லை. பின்னும் இவ்வியாதியின் வேறுபல சின்னங்களை யாராய்ந்து பார்க்குமளவில் இது கண்ணிற்குத் தெரியாததோ அல்லது தெரியக்கூடிய கிருமிகளினாலோ உற்பவிக்கிற வியாதியென்று 1909-ம் வருடத்திய லான்செட் என்ற மாதாந்தப் பத்திரிகையில் சொல்லுகிற டாக்டர் பியர்சன் என்பவரின் அபிப்பிராயத்துடன் கலப்பதற்கும் யாதொரு வழியையும் காணக்கூடவில்லை. ஏனெனில் சிசுக்களில் தான் இவ்வியாதி யுற்பத்தி என்றும் அவர்களுக்கு பெட்டிப் பால் முதலிய பலவித ஆகார வகைகளைக் கொடுத்து, கெடுத்து வருகிறார்களென்ற வார்த்தையானது ஆகாரத்தினால் தான் இவ்வியாதி ஏற்படுகிறதென்று கூறுவதற்கு ஒரு அடிப்படையாயுள்ளது; பலவித ஒத்துக்கொள்ளாத ஆகார பதார்த்தங்கள் கொடுக்கப்பட்டு வளர்ந்து வரும் அக்குழந்தையின் ஈரலிற்கு மிதமிஞ்சின வேலையைக் கொடுத்து அதின் ஈரலைக்

கெடுத்துவிடுகிறது. ஆகாரத்தைச் சரியான ஒருவறையறையான நியமத்துடன் வைத்தால் சில "கட்டிரோகம்" என்ற வியாதியால் பீடிக்கப்படும் குழந்தைகள் அந்த ரோகத்தினின்று' மீளும் சின்னங் களை அடைகிறது:—ஆகார பேதத்தினுலேற்பட்ட கோளாறுகளினுல் அணுக்கள் வளர்ந்து பித்தக் குழாயின் வழியே செல்வதற்கு இலக்கா கின்றது என்று சிலர் சித்தாந்தம் செய்கின்றனர். ஆனுலிவ்வியாதியில் முதன் முதலாகப் பித்தக்குழாய்களே பாதிக்கப்படாததினுல் இக்குழாய் வழிதான் இவ்வணுக்கள் உட்சென்று ஈரலைக் கெடுக்கிறதென்ற கோட்பாடும் சரியாகாது.

இக்காலத்தில் ஒரு வியாதிக்குச் சரியான காரணம் கண்டு பிடிக்க முடியாததினுலேயோ, அல்லது அணுவினுல் அவ்வியாதி உற்பத்தி யாகாததினுலேயோ, பின்னும் யாது காரணத்தினுலேயோ ஒரு வியாதி யின் கூற்றைச் சரியானபடி நிதானிக்க முடியாமற்போனுல், நமது இடையிலகப்பட்டுக் கொண்டிருக்கும் அணுவின் தலையில் காரணமாகிற சுமையைச் சுமத்தி விடுவது வழக்கமாக யிருக்கிறது. ஏனெனில் இது வரையில் யாருமே ஒருவித அணுக்களையும் இவ்வியாதியினின்றும் கண்டு பிடிக்கவில்லை. இதை எழுதுகிறவர் இவ்வித பதினுன்கு நோயுள்ள குழந்தைகளின் இரத்தம், மலம், ஜலம் முதலியவைகளை எல்லாவிதத்திலும் பரிசோதித்தும், ஒரு அணுக்கூடக் காணப்பட வில்லை. இக்குழந்தைகளின் இரத்தத்தை எடுத்து "கினிபிக்ஸ்" என்ற ஒருவகை எலிகளில் பீச்சுறையால் பீச்சிப் பார்த்ததிலும் அந்த ஜெந்துக்களின் ஈரல் யாதொருவித சுதரணவாத வித்தியாசமும் அடைந்ததாய்த் தெரியவில்லை. அன்றியும் கட்டியினுல் பாதிக்கப்படும் யாதொரு சிசுவின் இரத்தத்தை இந்த நூல் எழுதுகிறவரின் குழந் தைக்குப் பீச்சப்பட்டது. அக்குழந்தைக்கு யாதொருவித ரோகச் சின் னமும் உண்டாகவில்லை.

[அந்தக் கட்டி என்ற வியாதியின் வயப்பட்ட குழந்தை இரண்டு மாதங் கழிந்ததும் இறந்துவிட்டது.]

இதினின்று இவ்வியாதி இரத்தத்தின் வழியேப் பரவக்கூடிய

தென்பதற்கு மேற் சொன்னவைகளேப் போதுமான சாட்சி. கீழ் வரும் விஷயங்களும் சற்று கவனிக்கற்பாலது.

ஒரே குடும்பத்தில் பல பெண்களிருந்தும், ஒரு பெண்ணின் குழந்தை மாத்திரம் கட்டியினுல் பீடித்து இறந்து போவதாய்த் தெரிகிறது. இதரர்களின் சிசுக்கள் இவ்வியாதியின்றியே இருக்கின்றது. ஒரே இடத்தினின்றும் ஜனிக்கும் காரணத்தினுலேதான் ஒரு ஸ்திரீயின் மகவுகள் ஒன்றன் பின்னென்ருய் இறந்துபோவது; தாய்ப்பால் (எல்லாருக்கும் தாய்ப்பாலென்பது ஒன்றுதானே.) தான் இதற்குக் காரணமென்று நிர்விவாதமாய்ச் சொல்லமுடியாது. ஆகார வழியே இவ்வியாதி வருகிறதென்றும் சொல்லமுடிய வில்லை. ஏனெனில் பசும்பாலேத் தவிர மற்ற பலவித உணவுகள் கொடுத்தும் இந்த ரோகம் வருகிறது.

## ஜீவாதார வஸ்துக்களின்மை.

கட்டி ஸ்கர்வி என்ற வியாதியையுண்டுபண்ணும் ஜீவாதாரவஸ்து வில்லாததினுல் உண்டாகின்றதென்ற ஒரே கோட்பாட்டைக் கிளப்பி விட்டார்கள். புதிய பசுவின் பால், புதிய பழம், ஆரஞ்சு, எலிமிச்சம் பழம், காய் கறிகள் முதலியவைகள் புதியதானுல் அவைகளில் இந்த ஜீவதார வஸ்து விருக்கின்றது. இந்த ஜீவாதாரவஸ்து பால் முதலியவைகளேயும், இதர வஸ்துக்களேயும் நெருப்பில் வைத்து வேகவைப்பதால் அவைகளில் தங்குவதில்லை. இருக்கிறதுமில்லை. இந்தக் கட்சியைப் பின் பற்றி கீழ்கண்ட சாட்சியங்களால் தெரிகிறதாவது:—

1. இந்த வியாதி கொதிக்கவைத்துக் காய்ச்சின பாலும் நவநவமாய் அழகான பில்லேகளொட்டி நாகரிகமான பெட்டிகளி லடைத்து வரும் ஆகாரமும் கொடுக்கப்படும் குழந்தைகளுக்கே வருகிறது. தாய்ப் பாலேக் குடித்து வரும் குழந்தைக்கும் கட்டி வருகிறதென்ற கட்சிக்கு அக்குழவிக்குத் தாய்ப்பால் மாத்திரமின்றி அடிக்கடி காய்ச்சின பசுவின் பாலும் கொடுபட்டு வருகிறது. வங்காளத்தில் தாய்ப்பாலும் காய்ச்சின பசுவின் பாலும் மாற்றி மாற்றிக் கொடுத்து வருவதுதான் சாதாரண வழக்கம். போதுமான வரையில் தன் தாய்ப்பாலேக் குடிக்க வொட்

டாத அவ்விளங்குழவிக்கு அளவுக்கு மிஞ்சின பசுவின் பாலைக் காய்ச்சிப் புகட்டி வருகிறார்கள். வங்காளத்தில் பசுவின் பால் காய்ச்சினதன்றிப் புதிய பாலைக் கொடுப்பதே யில்லை. இந்தக் கட்சிக்கு விரோதமாய் வங்காளத்திலிருக்கும் முகம்மதியர்கள் அவர்களின் சிசுக்களுக்குப் பாலைக் காய்ச்சித் தான் உபயோகிக்கிறார்கள். அந்த சாதிக் குழந்தைகளுக்கு இந்தக் கட்டி எனும் வியாதி அவ்வளவாய் வருகிறதில்லை. கினிப்பிக் என்ற ஜெந்துக்கள் காய்ச்சின பசுவின் பாலால் ஊட்டப் பெற்ற போது 49 முதல் 52 நாட்களுக்குள் ஸ்கர்வி என்ற வியாதியா லிறந்தே போய்விட்டது. இந்த ஜெந்துக்கள் இறக்கு முன்பு கை கால் அசைக்க முடியாமலும் சந்துகளில் வீக்கத்தையும் காட்டிற்று.

| கினிப்பிக் ஜெந்துவின் சங்கியை. | ஆகாரம். | ஸ்கர்வி என்ற வியாதி கண்ட தினம். | பரீட்சையின் முடிவு. |
|---|---|---|---|
| 1 | பாலும் Oats ad-lib-ம் | 15-வது நாள் | 49-வது நாள் மரணம். |
| 2 | ஷை | 20-வது நாள் | 52-ம் நாள் மரணம். |
| 3 | ஷை | ஷை | இவ் வியாதி கண்டவுடன் காய்ச்சின பாலுடன் புல்லும், பச்சை மாஹிகளியும் கொடுக்கப்பட்டது. அவ்வியாதியினின்றும் தப்பிக்கொண்டது. |
| 4-ம் 5-ம் | Oat, பச்சை சஸ்யங்கள் புல் முதலியவை. | வியாதி இல்லை. | திடகாத்திரம். |

இறந்த பிறகு இவைகளின் உள் உறுப்புகளைப் பரிசோதித்ததில் அவைகளில் ரத்த ஊறல்களும், ரத்தம் தங்கி நிற்கும் சின்னங்களும் தோன்றின. ஈரல் பெரிதானதோடு கூட அவைகளின் அணுக்களிற்கு அங்கங்கே நாசமேற்பட்டு அவைகளுக்கு மஞ்சள் நிறத்தையும் கொடுத்துவிட்டது. அவயவ நாசத்தைக் காட்டக்கூடிய அறிகுறிகளோ வேறு இதர அறிகுறிகளோ கிடையாது. அந்த உறுப்புகளை மிகச்சிறிய துணுக்குகளாய் நறுக்கி அணுதரிசினியில் பார்க்க ஈரலின் அணுக்கள், அதிகக்கொழுப்பு தங்கி நாசமடைந்திருக்கிறதாய்த் தெரிய வந்தது தவிர இவைகளில் வேறு இதர யாதொரு மாறுதல்களும் தோன்றவில்லை. மேற்சொன்ன சோதனையினின்றும், டாக்டர் நந்தி என்பவர் பின்வருமாறு அபிப்பிராயப் படுகிறார்:—கினிப்பிக் என்ற ஜெந்துக்களைக் காய்ச்சின பசுவின் பாலால் மாத்திரமோ அல்லது ஜீவாதார அணுக்கள் இல்லாத வேறு இதர எந்த பதார்த்தத்தினால் மாத்திரமோ கொடுத்து வளர்த்து வந்தால் அவைகளின் ஈரல்கள் ஒருவிதப் பிரத்தியட்சமான மாறுதலடையத்தான் செய்கிறது. இம் மாற்றம் அவைகளி (கினிப்பிக்களி)ன் இதர எந்த அவயவங்களிலு மேற்படுகிறதில்லை. ஆனால் ஈரலில் உண்டாகும் இவ்வித மாற்றமே கட்டி எனும் வியாதிக் காதாரமோவென்று திட்டமாய்ச் சொல்லத்தக்க நிலைமையில் நான் இப்போது இல்லை. ஆனால் சில ரபிப்பிராயத்தைப் பார்க்குங்கால் இம் மாற்றங்கள்தான் முன்னால் உண்டாகின்றதென்றும் பிறகு அணுக்களினிடையே ஒருவிதமான கெட்ட தசை வருகிறதென்றும் சொல்லலாம். பரீட்சை செய்து சோதித்துப் பார்த்த ஜெந்துக்கள் அணுக்களின் ஈரலில் இரண்டாவது மாற்றம் உண்டாகுமுன் இறந்துபோய்விட்டன. ஒருவேளை அவைகள் உயிருடனிருந்திருந்தால் அந்த ஈரல்களும் கட்டியைப்போலுள்ள குறியைக் காட்டியிருக்கலாம். மேற்சொன்ன வார்த்தைகளின் உண்மையைப் பரீட்சித்துப்பார்க்கவும் விஷயங்களின் இரகசியங்களைத் தெரிந்துகொள்ளவும் கீழ்வரும் சோதனைகள் செய்து பார்க்கப்பட்டது:—பிறந்து சிலநாட் சென்றதும் கிட்டத்தட்ட ஒரே நிறையுள்ளதுமான ஐந்து 'கினிப்பிக்' என்ற ஜெந்துக்களைத் தெரிந்தெடுக்கப்பட்டது.

| கினிப்பிக்கின் நம்பர். | ஆகாரம். | "ஸ்கர்வி" என்கிற வியாதி கண்டதினம். | பரீட்சையின் முடிவு. |
|---|---|---|---|
| 1 | கொதிக்க வைத்த பசுவின் பால். | 18-வது நாள் | 32-வது நாள் இறந்து போய் விட்டது. |
| 2 | கொதிக்க வைத்த பசம் பால் 3 அவுன்ஸ் சுத்தமான பச்சைப்பால் 2 அவுன்ஸ் | 31-வதுதினம் | 85-வது நாளிறந்தது. |
| 3 | கொதிக்க வைத்த பசும்பால் 3 அவுன்ஸ், அதன் தாய்ப்பாலும் | நல்ல சரீரம் | வியாதி இல்லை. |
| 4 | கொதிக்கவைத்த ஒரு அவுன்ஸ் பாலுடன் தாய்ப் பால். | ,, | ,, |
| 5 | தாய்ப்பால் மட்டும். | ,, | ,, |

பரிசோதித்த விபரம். (Detail of Experiment.) * * * * * * * * * * * மேற் செய்த சோதனையிலிருந்து கொதிக்கவைத்த பசுவின் பாலில் ஸ்கர்வி என்ற வியாதி வராமலே யிருக்கவேண்டிய ஜீவ அணுக்கள் இல்லை யென்று தெரிகிறது. காய்ச்சிக்கொடுத்த பாலுடன் அவைகளுக் (குழந்தைகளு)க்குக் கொஞ்சமாவது தாய்ப்

பால் கொடுத்திருந்தால் ஸ்கர்வி என்ற வியாதி யணுகாமலே யிருக்கிறது. இதிலிருந்து தெரிகிற தென்னவென்றால் ஒரு ஜந்துவின் பாலில் தன் குட்டிகளுக்கு வேண்டிய ஜீவாதார அணுக்கள் உள என்பதைக் காட்டுகிறது. அதுபோல் புதிதான தாய்ப்பாலும் காய்ச்சினபாலும் புகட்டிக் கொண்டுவரும் குழந்தைகளுக்கும் "ஸ்கர்வி" எனும் வியாதி வராமலிருக்கக் கூடியதுதான். (மூன்றாவது கேசைப் பாருங்கள்) மேல் பரீட்சையில் சிறந்த "கினிப்பிக்"கின் அவயவங்களைப் பரிசோதனைசெய்து பார்த்ததில் டாக்டர் நந்தியின் பரிசோதனையாலும் காணப்பட்ட மாறுதல்கள் பூராவாக விருந்தது. ஈரல் அணுக்களினிடையே வளர்ந்தோங்கி வரும் அத்துர்த்தசை ஒன்றினும் காணப்படவில்லை. "ஸ்கர்வி" எனும் வியாதியால் சந்துக்களின் வீக்கமும் தொட்டால் வலியும் இப்படி அப்படி யசைக்கமுடியாத்தனமும் இருக்கின்றன. ஆனால் கட்டி என்கிற வியாதியால் அம்மாதிரி சின்னங்களெதுவுமேக் கிடையாது. ஆனதால் கட்டி என்கிற வியாதி வருகிறது ஜீவாதார வஸ்துக்களில்லாமையாலல்ல.

8. தாய்ப் பாலில் மாவு அம்சம் அளவுக்கு மிஞ்சி யிருக்கிறதினால் கட்டி வருகிறதென்று ஒரு சாரா ரபிப்பிராயப்படுகின்றனர். அந்தக் கோட்பாடுகட் கனுகூலமாய் 1. சென்னை மாகாணத்தில் இந்த வியாதி அநேகமாக பிராமண குடும்பங்களில்தான் கண்டு வருகிறது. பிராமணர்கள் சாகபட்சணிகளே. 2. மாவு பதார்த்தம் அதிகமாய்க் கலந்திருக்கும் ஆகாரத்தை உட்கொள்ளும் ஒரு தாய்ப்பாலில் சருக்கரை அதிகமாக விருக்கின்றது. இப்பாலானது தன்னை உட்கொள்ளும் குழந்தைகளின் ஈரலிற்கு மிதமிஞ்சின வேலையைக் கொடுத்து கட்டி என்கிற வியாதி வருவதற் குடன்படுகின்றது. கீழ் வரும் விபரம் இவைகளுக் கனுகூலமானவைகளல்ல. சாக பட்சணம் செய்கிறவர்களின் வீட்டில்தான் இவ் வியாதி வருகிறதென்று சொல்வது சரியென்று தோன்றவில்லை. ஏனெனில் சென்னை மாகாணத்தைவிட அதிகமாக இவ்வியாதி குடிகொண்டிருக்கும் வங்காள மாகாணத்தில் நூற்றிற்குத் தொண்ணூற்றொன்பது பெயர் வங்காளிகளும், மாமிச உணவு செய்கிறவர்கள்தான். மீன் வகைகளுக்கள் ஒரு வங்காளியின் நித்திய ஆகாரத்தில் ஒரு முக்ய உணவாகத்

தெரிகின்றது. அப்படியிருந்தும் பிரதி வருடத்திலுமவர்கள் எத்தனையோ குழந்தைகளை இப் பாழும் "கட்டி"க்காகப்பறிகொடுக்கிறார்கள். மீன்மாத்திரமல்ல மாமிசம், முட்டை முதலியபதார்த்தங்களும் சேர்த்துக்கொண்டு வரும் பலரின் குழந்தைகளுக்கும் இந்தக் கட்டி வரக் கண்டிருக்கிறோம். மாமிச போசனம் செய்யும் முகம்மதிய குழந்தைகளுக்கும் இவ்வியாதி ஏற்படுகின்றது அல்லது உண்டாகின்றதென்றும் சொல்லலாம். சென்னை மாகாணத்தில் மரக்கறி உணவு உண்கிற பிராமணக் குடும்பங்களில்தான் இவ்வியாதி பலமாகக் கண்டு வருகின்றதென்று அபிப்பிராய மிருந்தபோதிலும் அதற்குக் கீழ்க்கண்ட காரணங்களே சரியானவைகள். மிக மிகப் பிரியத்துடன் வளர்த்து வரும் தாய் தந்தையர்கள் தங்களுடன் உணவுட் கொள்ளும்போது கூடவேயிருந்தும் தங்கள் குழந்தைகளுக்கும் தாங்கள் உட்கொள்ளும் உணவிலும் பதார்த்தங்களிலும் கொஞ்சம் கொடுத்து வருவதும் வழக்கம். மரக்கறி சாப்பிடுகிறவர்களின் குடும்பங்களில் அதி பால்ய முதலே சிசுக்களுக்கு மேற் சொன்னமாதிரி இந்த வியாதிக்குக் காரணமான மாவு பதார்த்தம் கலந்த உணவேயளித்து வருவதாலும் இவ்வியாதி யுற்பவிக்கிறதென்று கூறலாம். இதனால் தாய் தந்தையரின் ஆகாரமல்ல இவ்வியாதிக்குக் காரணம். குழந்தையின் ஆகாரமே வியாதிக்குக் காரணமென்று வெளியாகிறது. இரண்டாவதாகத் தாய்ப்பாலில் சருக்கரை அதிகமா யிருப்பதினாலேதான் கட்டி வருகிறதென்று கூறும் விஷயத்தை ஆமோதிக்க வேண்டிய தெளிவுகள் கிடையா.

## 9. சில விஷவஸ்துக்களினால் கெடுக்கப்படும் ஈரல்.

வயிற்றிலும் குடலிலும் ஒத்துக்கொள்ளாத ஆகாரத்தினாலோ, அஜீர்ணத்தினாலோ உண்டாகக்கூடிய கெடுதல்களிலிருந்து உத்பவிக்கும் விஷ வஸ்துக்கள் இரத்தத்தில் கலந்து ஈரல்வழியேப் புகுந்து அதற்கேக் கெடுதல் செய்கிறதென்ற ஓர் கோட்பாடிருக்கின்றது: ஈரலின் வேலைகளிலொன்று இரத்தத்திலிருக்கும் கெடுதலான வஸ்துக்களை நீக்குவதே. மிகவும் கெட்ட வஸ்துக்கள் ஈரல் வழியே அதிகமாகச் சென்றால் அவைகள் ஈரல் அணுக்களைக் கெடுத்து விடு

கின்றது. கட்டியால் பீடிக்கப்பட்டிருந்த குழந்தைகளின் ஈரலைப் பரிசோதித்துப் பார்க்க அக்கெட்டிருக்கும் ஈரலின் தன்மையைப் பார்த்தால் ஈரலினணுக்கள் அளவுக்கு மிஞ்சி வேலை செய்யப்பட்டதனுல் இக்கேடுற்ற தன்மையை யடைவதற் கிலக்காகின்றதென்று தெரியவருகின்றது. இம்மாதிரி விஷ வஸ்துக்கள் வருமிடம் மாப்பண்டம், பசுவின்பால், தவறுதலான ஆகாரம், மிதமிஞ்சிய ஆகாரம் ஆகிய இவைகளின் கோளாறுகளாலுற்பவிக்கக் கூடிய அஜீர்ணத்தினின்றும் ஏற்படும் விஷ வஸ்துக்கள்.

## (II.) வியாதியாயிருக்கும் தாயின் முலைப்பால்.

வங்காளத்தில் அநேகமாக இத்தாய்மார்கள் அஜீர்ணம் முதலிய வியாதிகளால் கஷ்டப்படுகிருர்கள். இம்மாதிரி வியாதிகள் தாய்ப் பாலில் குணம், ருஜி முதலியவைகளை மாத்திரம் மாற்றி குழந்தைகளின் அஜீர்ணத்தை யுண்டுபண்ணி விஷ வஸ்துக்களைப் பிறப்பிக்கின்றன. இவ்விஷ வஸ்துக்கள் இரத்தத்தில் கலந்து ஈரல் வழியே போய் ஈரலிற்குக் கெடுதலை யுண்டுபண்ணுகிறது. ஈரலிற்கு மிதமிஞ்சின தொழிலைக் கொடுக்கக்கூடிய உணவுகள் இரத்தத்தில் கலந்து ஈரல் வழியேச் செல்லும்போது ஈரலைப் பெரியதாய்ச் செய்யக்கூடிய ஒருவித கட்டியை உண்டுபண்ண யிடம் பாடாகின்றதென்று டாக்டர் கிப்சன் அபிப்பிராயப்படுகிருர். ஆனுல் சாராயம் முதலிய மதுபானம் செய்யும் வழக்கமுள்ள மனிதர்களுக்கு அவர்கள் உதிரத்திற் கலந்து ஈரலிற்கு அதிக வேலையைத் தந்து ஈரலைப் பெரிதாக்குவதற்குப் பதிலாகச் சிறிதாக்குகின்றது. சிசுக்களின்கட்டியில் ஆகார பதார்த்தத்திலுள்ள விஷ வஸ்துக்கள் ஈரல் வழியே போய் அணுக்களிற்கு அதிக வேலையைக் கொடுத்தால் அந்த ஈரலும் பெரிதாயாகாமல் சிறிதாகவல்லவோ ஆக வேண்டும்? ஒரே காரணத்தால் இரண்டுவித அநுபவம், இருவித முடிவு வராதல்லவா? மற்றுஞ்சிலர் இந்த வியாதி இரத்த சுத்தியில்லாததனுல் அதாவது கேடடைந்த இரத்தத்தால் உண்டாகின்றதென்ற அபிப்பிராயத்திற்கு வருகிருர்கள். இதற்குதாரணமாக:— நீமுருகற்பாஷாண முதலிய விஷ வஸ்துக்களை உட்கொண்டு அது இரத்தத்திற் கலந்து நுண்ணிய பித்தக் குழாய் வழியே போய் இவ் வியாதியிலுண்டாகும் மாற்றத்தை ஈரலிற் குண்டுபண்ணுகிறது.

இரண்டாவது ஜனன காலமுதலே பித்தக் குழாய்கள் ஒருவிதமா யடைபட்டுப்போய் அந்தக் குழந்தைக்கு, அது வெகு காலம் பிழைத் திருந்தால் இவ்வியாதியின் சின்னங்களேற்படுகின்றது; இதை ஆமோதிக்கிறது போல் பின்வரும் மூன்றுவித அடையாளங்கள் சொல்லப் படுகிறது.

1. நலமோ, கெடுதலோ இவ்வியாதியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு சீக்கிரத்திலுண்டாகின்றது.

2. சுரம்.

3. சுவரொட்டி (Spleen) பெரிதாகிறது.

இத்தியாதிக் கெட்ட இரத்தத்தால் தான் உண்டாகின்றதென்று சொல்வதற்கு மாறுகக் கீழ்வரும் விஷயங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

1. கட்டியில் ஈரலும், மாங்கா Kidney யும் ஆகிய இவை இரண்டும் தான் கெட்டிருக்கின்றது.

இரத்தக் கெடுதியினுலுண்டாகிறதென்று சொல்வோமானுல் இதர அவயவங்களு மதினுல் பாதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

2. வயிற்றுளைவு முதலிய குடற் சம்பந்தமான வியாதிகள் இங்கிலாந்து, வேல்ஸ் முதலிய தேசங்களில் 1000-ல் 31-சிசுக்களிருக்கின்றன. கல்கத்தாவில் 1000-க்கு 21.

கட்டி குடலிலிருந்து விஷ வஸ்துக்கள் தேகத்திற் கலந்துண்டாகின்றதென்று கூறும் பட்சத்தில் இங்கிலாந்து, வேல்ஸ் இந்தத் தேசங்களில் இவ்விடத்தைவிட மிகவுமதிகமாக உண்டாகி யிருக்க வேண்டுமே ?

10. ஈரலிற்கு மிதமிஞ்சிய வேலையைக் கொடுப்பதனுல் ஆகார பதார்த்தம் ஜீரணிக்கிற சமயத்தில் ஈரலிற்கு மிகவும் வேலை கொடுக்கிற சமயம். ஆகார பதார்த்தம் ஜீர்ணமாய் அது இரத்தத்தில் கலக்கும் பொழுது ஈரலிற்கு அதிக இரத்தம் வந்துகொண்டிருக்கின்றது. அப்

படி முதன்முதலாக உணவுகளிலிருந்து இரத்தத்திற் கலந்து இருக்கும் வஸ்து ஈரல்வழியே (முதன்முதலாக)ப் போகின்றது. இவைகளிலிருந் தும், ஈரல் வெவ்வேறுய்ச் சிற்சில பதார்த்தங்களைத் தெரிந்தெடுத்து பலவித மாற்றங்களுக்காக அனுப்பப்படுகின்றது. தன்னுற் செய்யக் கூடிய வேலையைக் கஷ்டமின்றி எப்போதும் அது (ஈரல்) செய்யும் அளவிற்கு மேற்பட்ட வேலையானுல் அதுவும் திண்டாடி நாசமுறும். ஈரலிற்கு அதிக வேலைக் கீழ்வருங்காரணங்களா லுண்டாகின்றது:—

1. அளவுக்கு மிஞ்சிய உணவு. [அதிக ஆகாரமுட்கொண்டால் ஈரலிற்கு வேலை ஜாஸ்திதான்.]

2. தேகத்திற்கு ஒத்துக்கொள்ளாத ஆகாரம். ஒரு குழந்தை யைப் போஷிப்பதற்கான பண்டங்களில் ஈரலிற்கு இலகுவாய் வேலை செய்யக்கூடிய வஸ்து திடகாத்திரமான அக் குழந்தையின் தாய்ப்பால் ஒன்றுதான். ஷை தாயின்பால் அதிக மோசமாயிருக்கவோ, அல்லது ஒரு குழந்தைக்கு வேறு எந்தவித உணவுகளையுங் கொடுக்கவோ (அந்தக் குழந்தைப் பருவத்தில் ஒத்துக்கொள்ளாத)ச் செய்ய நேரிட் டால் குழந்தையின் பூர்த்தியான வளர்ச்சி சக்தியை அடையாத ஈரல் அந்த உணவுகளைச் சரியானபடி ஜீரணிக்கத் தன்னுலியன்றவளவு எவ் வளவோ முயன்றும் பலிக்காமல் கெட்டுப்போகின்றது. அதுவே மித மிஞ்சிய வேலை. எந்த அவயவமும் அளவுக்கு மிஞ்சிய வேலையைக் கொடுத்தால் முதலில் அது பெரிதாகிப் பிறகு அது கெட்டுப்போ கின்றது.

## மேற்கூறிய ஒவ்வாத ஆகாரத்திற் சில.

பிணிவாய்ப்பட்ட தாயின்பால் இயற்கையாகவே குழந்தைக்கென் றேற்படாத (அ) பசுவின் பால். பசுவின்பால் அதன் கன்றுக்கேற் பட்டதேயொழியக் குழந்தைகளுக் கேற்பட்டதல்ல. மாப் பண்டங் களும், தித்திப்புப் பதார்த்தங்களும் இந்நூலில் விவரிக்கப்போகும் கேசுகளில் கொடுபட்ட உணவு பதார்த்தங்கள்.

## 1. ஒரு வயதிற்குக் கீழ்பட்ட குழந்தைகளுக்குத் தாய்ப்பாலும் பசும்பாலும்.

10 கேஸ் தாய்ப் பால். பசுவின்பாலும் பார்லி கஞ்சியும் 6 கேஸ். தாய்ப்பால், பசுவின் பாலும் சவ்வரிசிக் கஞ்சியும்.

2 கேஸ் தாய்ப்பால் அரிசிக்கஞ்சி.
1 கேஸ் பசுவின்பால் மாத்திரம் (தாய்ப்பாலின்றி)
2 கேஸ் பசுவின்பாலும் பார்லிகஞ்சியும்.
3 கேஸ் பசுவின்பாலும் அரிசிக்கஞ்சியும்.

2 கேஸ் அழகிய டப்பாக்களிலும், நவநவமான சீசாக்களிலும் கண்ணைக் கவரத்தக்க பில்லைகளை ஒட்டி அதுகளில் நிரப்பிய ஆகாரங்களாக வரும் அளவுக்கு மேற்பட்ட மாவு, சருக்கரை முதலியவைகள் கலந்த பரதேச உணவுப் பண்டங்கள் 3.

2. ஒரு வயதிற்கு மேற்பட்ட குழந்தைகள்.
தாய்ப்பாலும் பசுவின்பாலுமாக உபயோகித்த கேஸ் 8.
தாய்ப்பாலும் பசுவின்பாலும் சாதமும்கொடுத்த கேஸ் 6.
மாவு முதலிய கலந்த பரதேச உணவு கேஸ் 2.

A. தாய்ப்பாலுடன்.

| | | |
|---|---|---|
| 1. | பசுவின் பால் | 10 |
| 2. | பசுவின்பாலும் பார்லி அரிசி முதலிய மாப்பண்டம் | 6 |
| | பசுவின்பாலும் சவ்வரிசிக் கஞ்சியும். | 2 |
| | அரிசிக் கஞ்சி | 1 |

B. தாய்ப்பாலின்றி

| | |
|---|---|
| பசும்பால் மாத்திரம் | 2 |
| பசும்பாலும் பார்லியும் | 3 |
| பசும்பாலும் கஞ்சியும் | 2 |

II. மனிதனல் தயார் செய்த பெட்டிப் பால் பெட்டி ஆகாரம் முதலியவைகள் கொடுத்தது.

## 12. மாதத்திற்கு மேற்பட்ட குழந்தைகள்.

| | |
|---|---|
| பசும்பாலும் தாய்ப்பாலும் | 8 |
| பசும்பாலும் அரிசிச் சாதமும் | 6 |
| இதர பெட்டி ஆகாரங்கள் | 2 |

## 3. இரண்டு வயதிற்கு மேற்பட்ட பாலர்கள்.

பசுவின்பாலும் சாதமும் கொடுத்துத்தான் இவர்களை வளர்த்தது. மேற்சொன்ன விஷயங்களையேப் பின்னும் சிறிது வியவகரிப்போம்.

## 1. அமித ஆகாரம்.

தாயின் அறிவின்மையால் ஒரு சிசுவிற் கிரமத்திற் கனுகுணமாக உணவூட்டப்படுகின்றது. அமிதஆகாரத்தின் காரணங்கள். 1. ஒரு குழந்தைக்கு அதன் வயதிற் கேற்றபடி இவ்வளவுதான் ஆகாரம் கொடுக்கவேண்டுமென்ற நியதியின்றி யிருக்கின்றது. ஒரு சிசுவின் வயிறு மிகவும் சிறியதான தென்று அதன் மட்டத்தாய்க்குத் தெரி கிறதில்லை. வயிறு உப்பி இனிமேல் துளிகூடக் கொள்வதற்கு இடமே யின்றி வயிற்றில் மேடுதட்டிப் போயிருக்கும் தருணத்தில் புகட்டின பாலை இக் குழவி செரிக்கமுடியாமல் வாந்திசெய்யும் தருணம் வரையில், வாந்தியும் செய்கிறவரையில் உணவூட்டுகிருள்.

சிலர் இந்தக் கண்ருவிக்குப் பின்னும் சில மட்டித் தாய்கள், இவ்வித சேஷ்டைகளுக்கு மேலும் கொஞ்சங்கூடத் தயவு தாட்சண்ய மின்றியே ஆகாரத்தை யூட்டுகிருர்கள். விழுங்கியதல்ல, தொண்டை வழியே உட்சென்ற பிறகு சீர்ணமாய் இரத்தத்துடன் கலந்த பதார்த்த மெதுவோ, அதுதான் அக்குழந்தையைப் போஷிக்கின்ற தென்ற விஷயத்தையே தாய், மறந்து விடுகிருள். குழந்தை அழும்போதெல் லாம், ஒரு சங்கோ மரத்தினுற் செய்த கோகர்ணமோ, பின்னு மிது போன்ற முறி முதலிய பாலேடையோ, இதுகள் வழியாய், அடிக்கடிப்

பசுவின் பாலைக் காய்ச்சிப் புகட்டி வரும், ஒரு மாதிரியான வழக்கம் வங்காளத்தில் ஜாஸ்தியா யிருக்கின்றது. பால் பெட்டியில் ஊற்றிக் கொடுக்கும் காலத்தில், அக்குழந்தைக்குத் தேவையான பாலைப் போதுமான வளவு, உறிஞ்சிக் குடித்துக்கொண்ட பிறகு பாலைக் குடிக்காது. சங்கினுல் புகட்டும் போது அப்படியல்ல. தொண்டை வழியே ஆகாரத்தை ஒரு குச்சியால் குத்தித் தள்ளித் திணிப்பது போல் அக்குழந்தை அழுதாலும், கதறினுலும், சிறிது கூடக் கவனிக்காமல் பலவந்தப்படுத்தி உட்திணிக்கிருள். பலவந்தப் படுத்தி அடி உதை, பூச்சாண்டி, இரண்டு கண்ணன் புலி, கரடி, அடி காட்டி, உதைகாட்டி, வெறியர், குடியர், புலிவேஷம் போட்டுக் கொண்ட காலத்தில் குழந்தைகளிடம் காட்டி மறுநாள் காலத்தும் கூட அந்த ஆளைக் காட்டிச் சாப்பிடச் செய்கிறது முண்டு. சிலர் முலைகொடுப்பதோடுகூட மேற்சொன்ன கல்யாணங்களெல்லாம் உண்டு. எப்போதும் மிதமிஞ்சிய உணவூட்டப்படுகின்ற தென்று கேட்க வேண்டியதே யில்லை.

## II. நேரமல்லாத நேரங்களில் உணவளித்தல்

ஒரு நாளில் குறிப்பிட்ட இத்தனை மணி நேரத்திற்குள், இன்னின்ன சமயங்களில் தான் உண வூட்டுகிறதென்ற நியதியே கிடையாது என்ற காரணத்தினுல் அழுதாலும் சரி, அது பசி அழுகையென்று நினைத்தே பால் புகட்டப்படுகின்றது. ஒரு குழந்தை யழுகிறது அநேகமாகப் பசியினுலே யல்ல. முன் புகட்டின ஆகாரம் சரிவர சீரணிக்காமல் வயற்றில் வலி யுண்டாய் அந்த வலியினுல் அழுகிற தென்று எவ்வளவு தூரம் தான் நாம் எடுத்துச் சொல்லி தாய்களை நம்பும்படிச் செய்கிறது? இவ்விஷயம் மிகமிகக் கஷ்டமாகவே யிருக்கிறது.

* குழந்தை பசித்தழுதால் மருந்தும் வயிற்றை வலித்தழுதால் பாலும் புகட்டாமலிருக்கத் தெரியும் நாளென்னுளோ?

அடுத்த வீட்டுக் குழந்தை மிகவும் கொழு கொழு வென்று புஷ்டியா யிருக்கின்றதைப் பார்த்து, அதைவிட நமது குழந்தையும்,

ஏன் பருத்துத்தடமேனுய், பெருமனுய் ஆகக்கூடாது? அதற்குச்சரியான ஒரேவழி, நல்ல சுத்தமானப் பசுவின்பாலைப் புகட்டி வருவது தானென்று, மிக ஆவலாய்ப் புகட்டி வளர்த்து வருவது, தாய்கள் செய்கை. ஹிந்துகுடும்பங்களில் பெண் குழந்தைகளைவிட ஆணுக்கு சாஸ்தி செல்லமும் சலுகையும் கொடுக்கப்பட்டுவருகிறது. ஆண் குழவிக்கு அதற்கேற்பட்டதைவிட அதிக உணவூட்டப்படுகின்றது. அதினலேயே ஆண் சிசுவுக்குத்தான் கட்டி ஜாஸ்தியா யேற்படுகின்றது. அமித உணவளித்தால் அக்குழந்தை புஷ்டியாகின்றதென்பது மாத்திரமல்ல. ஈரல் முதலிய அவயவங்களில் இதனுல் வியாதி யேற்பட்டு மரணத்திற் கேதுவாகின்றது.

## தாய்ப்பாலின் தோஷம்,

ஒரு குடும்பத்தில் பல சகோதரர்கள் ஒரே வீட்டில் தங்கள் தங்கள் மனைவி மக்களுடன் வளர்ந்து வரவும் அவர்களில் ஒருவர்க்குப் பிறக்கும் குழந்தைகள் மாத்திரம், ஒன்றன் பின்னென்ருய், இக்கட்டியினுலிறந்து விடுகின்றது. இதர ஷெ குடும்பத்திலேயேயுள்ள மற்றவர்களின் பாலர்கள் ஒன்றுக்காவது இக்கட்டி வருகிறதே கிடையாது. இப்போது இவ்வியாதி பரம்பரையை யொட்டி வருகிறதாவென்பதையும் கவனிப்போம். "தகப்பனிடமிருந்து கர்ப்ப வழியாய் வந்து சேர்ந்த வியாதியல்ல வென்பதற்குள்ள காரணங்கள்."

1. அ. க. ஒன்றுக்குப் பின்னொன்ருய் மூன்று கல்யாணம் செய்துகொண்டான். முதல் மனைவி ஒரு ஆண்குழந்தையையும் மூன்று பெண் குழந்தைகளையும் விட்டுவிட்டு இறந்து போய்விட்டாள். அக்குழந்தைகளெல்லாம் யாதொரு வியாதியுமின்றி திருடகாத்திரத்தை யுடையவர்கள்.

இரண்டாவது மனைவி ஒரே பெண்ணை மாத்திரம் விட்டுவிட்டிறந்து போய்விட்டாள். அந்தப் பெண்குழந்தையும் திருடகாத்திரமாயிருக்கின்றது. மூன்ருவது மனைவி நான்கு ஆண் குழந்தைகளும், ஒரு பெண் குழந்தையையும், ஆக இந்த ஐந்து குழந்தைகள் மாத்திரம் கட்டி என்கிற வியாதியிலகப்பட்டு எமனுக்கிரையாகின.

இரண்டாவது கேஸ்:—த. க. என்பவருக்கு இரண்டு மனைவிகள். இவ்விரண்டு பெயர்களும், உயிரோடிருக்கிறார்கள். முதல் மனைவிக்குக் குழந்தைகள் மூன்று. இம்மூன்று குழந்தைகளையும் கட்டியினால் பறிகொடுத்தாள்.

இரண்டாவது மனைவிக்கு இரண்டு ஆண் குழந்தைகள். அவ்விரண்டும், உயிருடனும், திருடகாத்திரத்துடனு மிருக்கின்றன.

மூன்றாவது கேஸ்:—த. ம. என்பவருக்கு இரண்டு விவாகம். முதல் தாரத்தின் ஒரே ஆண் குழந்தைக் கட்டியினாலிறந்துபோய்விட்டது. முதல் மனைவி யிறந்த பிறகு இரண்டாமவளுக்குப் பிறந்தது ஒரு ஆணும் ஒரு பெண்ணுமா். இவை இரண்டும் திருடகாத்திரமாயிருக்கிறது. வியாதியேயில்லை. சௌக்கியமாயுயிர் வாழ்கிறது. இது வரையில் கூறி வந்த மேற்கண்ட உதாரணங்களினால், ஒரே தாயின் குழந்தைள் தாம். இவ்வியாதிவாய்ப் படுகிறதென்றும், அதன் பிதாவானவர், வேறு விவாகம் செய்து, அந்த மனைவிக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கு இவ்வித வியாதி வருகிறதில்லை யென்றும் ஆனதால் பிதா இந்த வியாதிக்குக் காரணமல்ல வென்றும் வெளியாகின்றது. இது மாத்திரமல்ல; தாயினிடத்திலிருந்து கர்ப்போற்பத்தியிலேயே இந்த வியாதியை அவள் குழந்தைச் சர்பாதித்துக்கொண்டு, பிறக்கவில்லை என்பதற்கு ருஜுவாக, இந்தக்கட்டி பிறந்து ஆறு மாதம் கடந்த பிறகுதான் உண்டாகின்றது. ஆனதால் மாதா பிதாக்களால், அளிக்கப்படும் ஒரு பாரம்பரியமான வியாதியென்று இதைச் சொல்லலாமோ? கூடாது.

வியாதி வரும் வயது.சாதாரணமாய் ஒரு குழந்தையின் ஆகார மாறுதலாகும் காலத்தில் தான் உண்டாகின்றது. திடகாத்திரத் தாய்களின் முலைப்பாலை மாத்திரம் குடித்து வரும் குழந்தைகளுக்கு இவ்வியாதி மிகமிக அபூர்வம். ஒரு தாய் தன் குழந்தைகள், தன் பால் மட்டுமே குடித்து வளர்ந்து வருகிற தென்று சொல்லும்போது பசுவின்பால், பார்லி அரிசிக்கஞ்சி முதலியவைகளும் அக்குழந்தையின் ஆகாரத்தின் இடையிடையேக் கலந்து தான் வருகிறதென்ற விஷயத்தை அவள் மறந்தே போய்விடுகிறாள். அநேகமாக வங்காளத்தி

லும், இதர நகரங்களிலும், மேற்சொன்ன மாதிரிக் கலப்பட ஆகாரம் தான் கொடுபட்டு வருகிறது. இப்பொழுது ஒரே தாய்க்குப் பிறக்கும் குழந்தைகள் ஜாடாவுக்குமே ஏன் இந்த வியாதி வரவேண்டுமென்று விசாரிக்கப் புகுந்தால், அதற்கு அதிகமான சமாதானமிருக்கின்றது. இம்மாதிரி ஒன்றன் பின்னொன்றாய்க் குழந்தைகள் யாவற்றையும் இவ்வியாதிக் கிரையாக்கின இந்தக் குழந்தைகளின் தாயின் பால் அளவில் ரொம்ப குறைவாகவோ அல்லது குணத்தில் ரொம்பவும் கெடுத லாகவோ யிருக்கின்றது. இதற்குக் காரணம் ஷெ மாதா பித்த வாய்வு கிரஹணி முதலிய வியாதிகளால் பீடிக்கப் பட்டு வருகிறாள். ஆனதால் குழந்தைகளுக்கு முலைப்பாலேயில்லாமல் (இருந்தாலும் மிகமிகக் கொஞ்சமாகவே யிருக்கிறது.) பசுவின்பால், அரிசிச்சாதம் கஞ்சி திதிப்புப் பண்டங்கள், முதலிய கையில் கிடைத்த எதையுமேக் கொடுத்து வளர்த்து வருகிறார்கள். மேலும் சிறிதளவேக் கிடைக்கும் தாய்ப்பாலும் குணத்தில் கெடுதலாகவே யிருக்கின்றது இதுதான் கல்கத்தாவும் அதைப்போலுள்ள பெரிய நகர வாழ்க்கை. இதினாலேயே இங்குள்ளவர்களின் குழந்தைகளுக்கு இவ்வியாதி அதிகமாய்ப் பரவுகிறது.

## படுதாவழக்கம் கோஷா ஸிஸ்டம்.

மிகவும் கடுமையாயிருக்கும் நகரங்களில், தகப்பன் குழந்தைகளுக்கு புஷ்டியான பண்டங்களை வாங்கிக் கொடுப்பது கஷ்டம். அதனால் பெண்கள் அடிக்கடி வியாதியால் தொந்தரையடைகிறார்கள். அவர்களுக்குத் தன் குழந்தைகளுக்கு வேண்டியமட்டும் கொடுப்பதற்குள்ள பால் தன்னிட மில்லாததினால் பசுவின் பால், பார்லி, அரிசிச் சாதம் பரதேச ஆகாரம் முதலியவைகளைக் கொடுத்துக் கட்டி என்கிற வியாதியை வரவழைக்கிறார்கள். இந்த வியாதி வந்த குழந்தைகளுக்கு செவிலித்தாய் (பாற்காரி) வைத்துப் பாலூட்டச் செய்வதுடன் இதர எந்த ஆகாரத்தையும் நிறுத்திவிட்டால் சௌக்கியமடைகிறது. நாட்டுப்புறங்களில் வாழும் பெண்கள் நல்ல ஆகாரம் புசித்து திடகாத்திரத்தோடிருப்பதனால், தங்கள் குழந்தைகளுக்கு அன்னிய உணவளிக்காமலே தன் பாலை மாத்திரம் ஊட்டி வருவ

தால் அவர்களின் சிசுக்களுக்கு இவ்வியாதி உண்டாகிறதில்லை. அதவா ஏற்பட்டாலும் மேற்சொன்ன நகர மெனப்படும் நரகவாழ்க்கை யிலுள்ளவர்களின் குழந்தைகளுக் கேற்படுவது போல் அவ்வளவில்லை குழந்தைகளுக்குப் பால் மறக்கச் செய்யும்போதும், தாய் மறுபடி அடுத்த கர்ப்பம் உண்டாகும்பொழுதும்; இந்த வியாதி சாதாரணமாய் வருகின்றது. அந்த மாதிரி காலத்தில் அத்தாய்க்கு மிகவும் பால் குறைந்துபோய், வேறுவித உணவுகள் தேடிக்கொடுக்கப்படுகிறது. அதுவும் இவ்வியாதி வருவதற்குள்ள காரணங்களில் ஒன்றுதான்.

உதாரணமாக :—க. ச. என்பவருக்கு மூன்று குழந்தைகள் கட்டியினுலிறந்துவிட்டது;ஒவ்வொரு குழந்தையும் 7-மாதம் 8-மாதம் பிராயம் நடக்கும்பொழுதுதான் அடுத்தகர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது.அச் சமயங்களில் அவளுக்கு முலைப்பால் மிகவும் குறைவாகவே யிருந்து வந்ததினுல், பெயருக்கு மாத்திரம் முலையூட்டப்பட்டதைத் தவிர பசுவின்பால் முதலிய இதர உணவுகள்தான் குழந்தைக்குத் தேடிக் கொடுக்க வேண்டியதாயிற்று. சில மாதத்திற்குள் அம்மூன்று குழந்தைகளும் கட்டியினுலிறந்தன.

ஆனதால் தாய்ப்பாலிலிருக்கும் குற்றம் குழந்தைகளுக்குக் கட்டி வருவதற்கு நேர்முகமான காரணமல்லாது போனுலும், வேறுவிதத் தில் காரணமாகத் தானிருக்கின்றது.

## இயற்கையாய் சிசுக்களுக்கேன் றேற்படாத ஆகாரம்.

வங்காளத்திலுள்ள தாய்கள் தங்கள் பாலைக் கொடுப்பதுடன் இரண்டொரு சேர் பசுவின் பாலைக் காய்ச்சி குழந்தைகளுக்குப் பலவந் தத்தின்பேரில் ஊட்டுவிப்பது புதுமாதிரி பஹிஷ்காரமாயிருக்கின்றது. அத்தாய் எவ்வளவு திட தேகமுள்ளவளா யிருந்தாலும், அக்குழந் தைக்குப் போதுமானவளவுள்ள பாலும் தன்னிடமேயிருந்தும், தன் பால் மாத்திரம் அக்குழந்தையைப் போஷிப்பதற்குப் போதாதென்ற மூட எண்ணத்தினுலேயே இம்மாதிரி செய்யப்படுகிறது. இந்தவித மாகப் போற்றி வளர்க்கப்பட்டு வரும் குழந்தைகளுக்குப் பசுவின்பால், புட்டிப்பால் முதலிய உணவுகளைக் கொடுத்து, வயிற்றை நிரப்பிவருவ

தால், போதுமான அளவு தாய்ப்பாலிருந்தும், அதைக் குடிப்பதற்கு அக்குழந்தைக்கு வயற்றிலிடமின்றிப் போய்விடுகின்றது. ஆனதாலிக் குழந்தைகள் அநேகமாகப் பசுவின்பால் முதலியவைகளாலேயேதான் வளர்க்கப்பட்டு வருகிறதென்று சொல்லலாம். இயற்கையாகவே ஒரு சிசுவிற்கேற்பட்டது தாய்ப்பாலாக விருக்கையில் இதர ஆகாரங்களைச் சரியானபடி சீர்ணிக்கச் செய்வதற்கு அக்குழந்தைக்கு மிகவும் கஷ்டமாய்த் தானிருக்குமென்பதைச் சொல்லவும் வேண்டுமோ! ஆசையுடனும் பாசத்துடனும் குழந்தைகளை வளர்த்துவரும் தாய் தந்தையர்கள் தாங்கள் உண்ணும் எந்த உணவிலும், தங்கள் பாலர்களுக்கும் பங்கு கொடுத்து வருவதும் வழக்கமாகவே யிருக்கிறது.

பல பெண்குழந்தைகளுக்குப் பிறகு பிறக்கும் ஆண்களுக்குந்தான் இம்மாதிரி வழக்கம், செல்லம் கொடுத்து ஊட்டி வரப்படுகிறதும், அந்த அபூர்வமாய்ப் பிறந்த ஆணை அந்த வீட்டுக் குலதெய்வம் போல் போற்றப்பட்டு வருகிறதும் தெரிந்த விஷயம்தான். ஆகையினலே இம்மாதிரி மிகவும் தவஞ்செய்து பிறந்த இந்த ஆண் குழந்தையையும் இந்தப் பாழும் வியாதியும் விடுவதேயில்லை.

மேலும் சாகபட்சணிகளான ஹிந்து குடும்பங்களில்தான் இது அதிகமாயிருக்கலா மென்பதற்குள்ள காரணங்கள் எதுவாயிருக்கலா மென்றும் பார்ப்போம்? வெள்ளையர்கள் முதலியவர்களின் தீனியில் ஊன் பண்டங்களதிகமாகவே யிருக்கின்றது. அவர்களின் சிசுக்களுக்கு மாவு அம்சமில்லாத சூப்பு முதலியவைகளளிக்கப்பட்டு வருகிறது. மரக்கறி உணவருந்துபவர்களின் குழந்தைகளுக்கு மாப்பண்டம் கலந்த சாகபட்சணங்கள் கொடுபடுகிறது. அதனலேயே ஹிந்து குடும்பங்களில் இவ்வியாதி அதிகமாகவே யிருக்கலாம்.

## குழந்தைகளின் ஈரலைக் கெடுக்கும் ஆகாரத்திற் சில

1. பசுவின் பால். இதுதான் சிசுக்களின் ஈரலை நாசஞ்செய்யக் கூடியதில் முதன்மையானது. நகரங்களிலும், பட்டணங்களிலும், விற்கப்படும் பாலில் மரிக்கன் மாவு, கார்ண்பிளோர், முதலிய மாக்களைக் கலந்து தடிப்புக்காகவும், வெண்மைக்காகவும் செய்கிற துவேஷங்களி

ளுலேயே மிகவும் இளம்பிராயத்திலேயே இந்தவிதக் கெடுதலான உணவை யூட்டி சிசுவின் அதிநுட்ப ஈரலைக்கெடுத்து விடுகிருர்கள். பசுவின்பாலோ அடியில் காணும் விதங்களில் கொடுக்கப்பட்டு வருகின்றது.

I. கறந்தபடியே சுத்தமாயுள்ள ஜலம் கலவாத பசுவின்பால். இது ஒரு யௌவனப் பருவமுள்ள பால்யனுக்குக் கைகண்டது. ஒரு பாலகனுக்கு மிகவும் கெடுதலானது. பசுவின்பால் இயற்கையிலேயேக் கன்றுக்குட்டிக்கென்றே யேற்பட்டதென்றும், அதை ஒரு சிறிய சிசுவிற்குக் கொடுக்கவேண்டுமானல் பலவிதத்தில் மாற்றவேண்டுமென்ற விஷயத்தைத் தாய் மறந்தே போய்விடுகிருள்.

II. அரிசி மாப்பொடி, அமெரிக்காச் சோளமாவு முதலானதுகள் கலந்துவிற்கும் பசுவின்பால் இதுவும் குழந்தைகளுக்கொவ்வக் கூடியதல்ல.

III. எருமைப்பாலைக் கலந்து கொடுக்கும் பசுவின்பால். எருமைப்பாலில்பசுவின் பாலிலிருப்பதைவிடவெண்ணெய் அதிகமாகவிருப்பதால், அதுவும் குழந்தையின் ஈரலைப் பாதிக்கச் செய்வதுதான். ஆகையால் எருமைப் பால் கலந்த பசுவின்பால் சிசுக்களுக்குச் சீர்ணமாவதும் கஷ்டந்தான்.

IV. காய்ச்சினபால் (கொதிக்க வைத்தது) இயற்கையாகவேப் பாலைக் கொதிக்க வைக்காமற் புசிப்பது உத்தமம். கொதிக்கவைத்தப் பால் பாலல்ல. பாலைக் கொதிக்க வைப்பதால் அதிலுள்ள இயற்கைக் குணமுள்ள ஒருமுக்ய வஸ்துவின்றியே ஆய்விடுகின்றது. நன்ருகக்காய்ச்சின பாலைவிடச் சுத்தப் பச்சைப்பால் சீக்கிரத்தில் சீர்ணத்திற்கு வரக் கூடியது. ஆனல் நம் இந்தியாவில் சுத்தப் பச்சைப்பாலை யுபயோகிப்பது துர்லபம். உஷ்ணபூமியில் பாலைக் காய்ச்சிவைத்தால்தான் கெடாமலிருக்குமே தவிர கறந்தபடியே வைத்திருந்தால் சடுதியில் கெட்டுவிடும். பெரிய பட்டணங்களில் பாற்காரர்கள் நேற்று கறந்த பாலை (அதாவது முதல்நாள் பாலை) இன்றைக்குக் கொடுக்கப்பட்டு அதுவும் குழந்தைகளுக்குப் போட்டப்படுகின்றது.

## B. பாலர்களின் உணவிலுள்ள அதிக மாப் பண்ட வஸ்துக்கள்.

மாப் பண்டத்தை ரத்தத்துடன் கலந்து பின்னிட்ட உபயோகத்திற்காக ஒருவித பக்குவம்செய்து தேகத்தில் சேமித்து வைப்பதற்கு ஈரல் ஒரு முக்ய அவயவம். ஆகையால் மாப்பண்டம் உட்கொண்டு அது இரத்தத்திற் கலந்து ஈரல்வழியேப்போய் அங்கு நடக்கும் சில பல மாறுதல்களினுல் ஈரலிற்கு அதிக வேலைகொடுக்கப் படுகின்றது. அதிக மாப்பண்ட முட்கொண்டால், அதை அதை மாற்றி ஸ்டோர் செய்வதற்கு ஈரலிற்கு அளவுக்கதிக வேலை கிடைக்கின்றது. அப்படி அதிக வேலை செய்வதனுல் ஈரல் பலங்குன்றி வலிமையிழந்து துர்ப்பலமடைகின்றது. மேலு மேலும் அளவுக்கு மிஞ்சி கொடுக்கும் மாப் பண்டத்தை ஒருவகை சருக்கரையாக மாற்றி சேமித்துவைக்க ஈரலினுல் முடியாததினுல் அந்த சருக்கரை நீரிற் கலந்து நீர்வழியே வெளியாகின்றது. நீர்ரோகியின் ஈரல் பெரிதாயிருக்கின்றதென்று டாக்டர் ஆஸ்லர் (Osler) சொல்லியிருக்கிருர். அதனுல் ஒரு குழந்தைக்கு மாப்பண்டமதிகமாய்க் கொடுத்துவந்தால் அக் குழந்தையின் ஈரலும் பெரிதாகலாம். வங்காளத்தில் சிசுக்களால் தாங்கமுடியாத வயதில் மாப்பண்டம், முதலிய உணவுகள் கொடுக்கப் ட்டு வருவதால் அந்தவித உணவுகளை மிக மிக இளம்பிராயத்திலுள்ள ஈரல் நன்ருக சீர்ணிக்கும் நிலைமைக்குக் கொண்டு வருவதற்குக் கடின வேலை செய்யவேண்டி யிருக்கிறது. மேலுக்குமேல் ஊட்டிவரும் உணவை அது தன்னுல் முடிந்தவரையில் சிரமப்பட்டு தேகத்தில் கலந்துகொள்ளும்படியான பக்குவத்திற்குக் கொண்டுவர முயலுகின்றது. ஆனுல் இறுதியில் அது பலிக்கவில்லை. அளவுக்கு மிஞ்சிய தொழில் செய்யுங்காலத்தில் ஈரல்பருத்தும், கஷ்டப்பட்டும் வேலை நடத்திப்பார்த்து, அதுவும் கூடாமற்போய் மறுபடியும் சிறிதாகிவிடுகின்றது.

சிசுப் பருவத்திலேயே பாலர்களுக்கு மாப்பண்டம் கொடுத்து வருவதினுலேயே, கட்டி ஏற்படுகிறதென்று ஒரு சாரார் சொல்லுகிருர்கள். ஆனுல் அது ஒரு காரணம்மாத்திரம் போதாதென்று தைரியமாயெதிர்க்கலாம். ஏனெனில் மாப்பண்டங்களைக் கொடுபடாதக் குழந்

தைகளுக்கும், கட்டி வந்திருக்கின்றதென்பதற்கும் போதுமான ருஜு விருக்கின்றது. எப்படியிருந்தபோதிலும் அதிபால்யத்திலேயே மாப் பண்டம் கொடுப்பது கட்டி வருவதற்கேற்பட்ட முகாந்தரங்களில் மிகவும் முக்கியமானது இதுவே என்று தாராளமாகச் சொல்லலாம்.

## கட்டி என்னும் வியாதியின் சின்னங்கள்.

ஒரு குழந்தைக்குத் வயிர்றில் கட்டி என்ற வியாதி ஏற்பட்டிருக் கிறதென்று அதன் பெற்றோர்கள் தெரிந்துகொண்டதற்கு வெகுநாள் முந்தியே அந்த வியாதி அதற் கேற்பட்டுளதென்று சொல்லலாம். எப் படியெனில் இவ்வியாதி சாவதானமாய்த்தான் அதின் குறிகளை வெளிக்காட்ட ஆரம்பிக்கிறது. முதன் முதல் யாதொரு அடையாள மும் வெளிக்குத் தெரிவதே கிடையாது. குழந்தையும் எப்போதும் போலவே சந்தோஷத்துடனேயே சிரித்த முகமாய் விளையாடிக் கொண்டுதா னிருக்கிறது. வியாதி உற்பத்தியாய் வெகுநாட் பின்னரே திடும்பிரவேசமாய் குழந்தைக்குக் கட்டி என்று தெரிந்துகொள்கிறார் கள். இத்தனை நாளோ அல்லது இத்தனை மாதத்திற்கு முந்திதான் இக் கட்டி ஆரம்பித்திருக்கலாமென்றுகூட ஒருவராலும் திட்டமாய்ச் சொல்லமுடியாது.

* ஒரு கேஸ் தொண்டையில் இருமல் வியாதியினிமித்தம் ஒரு குழந்தையை இதை எழுதுபவரிடம் காட்டப்பட்டது. குழந்தை எழு மாதப் பிராயம். அதன் வயிற்றைப் பரிசோதித்துப் பார்த்தபோது ஈரல் பருத்திருந்தது. அன்றுவரையில் அதன் பெற்றோர்களுக்குக் குழந்தை கட்டியால் பீடிக்கப்பட்டிருக்கிறதென்ற சமாசாரமே தெரியாது.

## சில முன் னறிகுறிகள்.

(1.) முதலாவது அக் குழந்தைக்குக் கொடுக்கு மாகாரங்கள் ஒத்துக்கொள்வதில்லை. இதனு லடிக்கடி வாந்தியும் செய்கிறது. சிற் சில நாட்களில் வயிறு உப்பி இருப்பதுபோற் காட்டுகின்றது. கூடவே சில நாள் வயற்றுப் போக்கும், பின்னும் சில வேளைகளில் மல பந்தமும் ஏற்படுகின்றது. சில கேஸ்களில் சில குழந்தைகள்

கிடைத்ததை யெல்லாம், ஆவலுடன் முந்தி தின்றுவிடுகின்றது. ஆனல் சில வாரங்கள் கடந்து ஆகாரத்தையேத்தள்ளி விடுகின்றது.

(2.) குழந்தைக்குத் தூக்கம் சரியானபடி யிருக்கிறதில்லே. இரவில் பலதடவை அடிக்கடித் தூக்கத்தினின்றும் விழித்துக் கொண்டும் அழுது கொண்டும் விழித்துக்கொள்கிறது. சந்தோஷமா யும், இனிமையாயு மிருந்த குழந்தையின் முகக் குறி மாறி முகம் வெறி த்துக் காட்டுகிறது. அக்குழந்தையைப்பாயில் எத்தனே தடவை தானெ டுத் தெடுத்துக் கிடத்தினலும் அது தானகவேத் தரையில் வந்து கிடக்கின்றது.

(3.) சீதோஷ்ணவஸ்தை: இரவுக் கிரவு அக்குழந்தைக்கு உடம்பு கதகதப் பேற்பட்டு சூடாகவே யிருக்கும். கையும் காலும் உடம்பைவிட சூடதிகமாயிருக்கும்.

(4.) அக்குழந்தையின் நிறமே ஒரு மாதிரியான வெளேறென்ற வர்னத்திற்கு வந்து விடுகிறது.

(5.) குழந்தையின் மூத்திரமோ குறைவாயும் செந்நிறமாயு மிருக்கிறது.

குறிப்பு:—மேற் சொன்ன 5 சின்னங்களுமோ அல்லது அதிற் பெரும்பாகமோ ஒரு குழந்தைக் கிருக்குமானல் அதுதான் அதற்குக் கட்டிக்காதாரமென்று பெற்றோர்கள் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

முக்கிய (வியாதி வந்த பிறகுள்ள) சின்னங்கள் ஈரல் பெரியதா யிருக்கும்போது * * * * * சுரம் கண்டு இவ்வியாதியின் ஆரம்ப முதலே குழந்தையின் உடம்பு சூடாகவே யிருக்கிறது. இச்சூடோ இவ்வியாதியுள்ள காலம் பூராகவுமே யிருக்கிறது. முதலில் கையிலும் காலிலும் தான் இந்தச் சூட்டை வெளிக்காட்டுகின்றது, சீதோஷ்ண மறிவிக்கும் சுரமறி கருவியைக் கொண்டு (தெர்மா மீட்டர்) பார்த்தால் அதில் 99 டிக்ரி சூடு தெரிகிறது. சிலதுகளுக்கு அச்சமயம் எவ்வித உஷ்ணமுமே யில்லாமலு மிருக்கிறது. ஆனல் சுரக்குச்சியை அபானத் தில் வைத்துப் பார்த்தால் மறைவா யிருந்த இந்த சூட்டையும் தெரிந்து

கொள்ளலாம். ****** வியாதி முதிர முதிர சுரமு மதிகரித்துக் கொண்டே வருகிறது. சூடுண்டாகுமுன் குளிரோடு நடுக்கமோ கிடையாது. இராக்காலங்களில்தான் சுரம் 99 டிக்ரி முதல் 100 டிக்ரி வரையில் உயருகின்றது. சில கேஸ்களில் காலை நேரங்களிலும் சுரமிருக்கக் கண்டிருக்கிறோம். இந்த சுரம் இந்த நேரத்தில் தானடிப்பது என்ற ஒரு நியதியின்றி விட்டு விட்டடிப்பதும், சில கேஸ்களில் எல்லா சமயங்களிலும் குறிப்பிட்ட நேரத்தில் வருவது முண்டு. சில குழவிகளுக்கு ஆதிமுதல் அந்தம்வரையில் சுரமிருப்பதுண்டு. சுரமுள்ள காலங்களில் ஷெ குழந்தை வெடு வெடுத்த குணமும், சுரமில்லாத நேரத்தில் சிறிது விளையாடிக்கொண்டு மிருக்கும்.

2. மலபந்தம்:—இந்த வியாதி அதிகரிக்க அதிகரிக்க மலச்சிக்கலும் அதிகப்பட்டுக்கொண்டே வருகிறது. வயிறு பேதிக்குக் கொடுத்தாலொழிய மலவிர்த்தியாவதே இல்லை. மலத்தின் நிறம் முதலில் சரியாகவே யிருக்கின்றது. போகப்போக மலம் அதிகரித்தும் மண்போன்ற நிறத்திற்கும் வருகிறது என்பது மாத்திரமின்றி மேலு மேலும் கெடுதலை யடைந்து வரும் ஈரலின் வேலையில் மலர் ஒரு தடவை யிருந்த நிறம்போலின்றி வெவ்வேறு நிறமாகவும் காட்டுகின்றது. கடைசியில் மலம் துர்வாசனையுடன் வெண்மை நிறமாயிருக்கிறது.

3. ஈரல்:—ஈரலோ சன்னஞ் சன்னமாய்ப் பெரிதாய்க்கொண்டு வந்துக் கடைசியில் பெரிய பருமனை யடைகிறது. ஈரல் ஒரு மாதிரிப் பெரியதாயிருக்கும் காலத்தில், வயிறு மிகவும் பெரியதாயும் வயற்றின் மேலோடிக்கொண்டிருக்கும் இரத்த நாளங்கள் அதிகப் புடைப்பாகவும் காணப்படுகிறது. இத்தருணத்தில் குழக்தை தூக்கத்திலிருக்கையில் இதை நன்ருய்ப் பரிசோதிக்கலாம். கையினுல் தடவிப் பார்த்தால் ஈரல் பெரிதாயும் கல்லுப் போல் கட்டியான நிலைமையிலும் காணப்படும். ஈரலின் ஓரம் தொட்டால் நன்ருய்த் தெரியும்படியான நிலைமையிலிருக்கும். ஈரலும் ஒரே சீராய்ப் பருத்தும் சில கேஸ்களில் மாத்திரம் சில பாகம் சிறுத்தும் சில பாகம் பருத்தும் காணப்படும். ஈரலில் வலியே கிடையாது. பித்த சலப்பையும் பருக்கிறதில்லை. விரலை வயிற்றின் மேல் வைத்து மற்ெருருகையின் விரலால் வயிற்

றின்மேலுள்ள விரலின்மீது தட்டிப்பார்த்தால் அந்த ஈரலிருக்கும் பக்கம் கட்டையின்மேல் தட்டும் சத்தம் கேட்கும். சில கேஸ்களில் இச்சப்தம் தொப்புள் கீழ்ப்புறம்வரையிலிருக்கக் காணலாம்.

4. (சுவ ரொட்டி) Spleen:—இந்த நிலைமையில் இது பெரிதாவதில்லை.

5. நீர் குறைந்தும் சிவந்துமிருக்கும்.

## வியாதியுள்ள குழந்தையின் நிலைமை எப்படி யிருக்குமென்பது ?

6. சந்தோஷமின்றிப் பார்த்தால் பரிதபிக்கக்கூடிய நிலைமையில் முகம், தேகம், கால் முதலிய யாவும் வெளுத்துச் சக்தியற்று மிருக்கும். சிலவைகளில் கண்களில் மஞ்சள் நிறம் தெரியும். மேல் வயிறு மிகப் பெரியதாயிருப்பதாய்த் தோன்றும். பழுவெலும்புக ளெல்லாம் கிருஷ்ண பரமாத்மாவின் அருமைச் சிநேகிதராம் குசேலர்க்கிருந்தது போல் எண்ணிப்பார்க்கக்கூடிய நிலைமையில் வெளிக்குத் தோன்றி அவ்வளவு இளைத்திருக்கும்.

## ஈரல் சுருங்கும்போதுள்ள குறிகள்.

ஈரலின் சுருக்கம் சில காலம் பொருத்து வர வர துரிதமாய் இந்த ஈரல் சிறுக்கத் துவங்குகிறது. இம்மாதிரி சுருக்கம் கொடுப்பதைத்தான் கட்டி என்பது. கட்டி என்பது என்னவென்பதேத் தெரியாத சில நாவிதப் பண்டிதர்களும், குயவர்களும், மற்றோரும் வைத்தியப் பள்ளிக்கூடங்களில் வாசிக்காமலும், நல்ல அநுபவம் பெற்றவர்களுடனின்று தெரிந்து கொள்ளாமலும், பட்டுக் குட்டையும், பித்தளைப் பெட்டியும் கையுமாயலைந்து அறிவில்லாத பெண்மணிகளையும் பெற்றோர்களையும் மயக்கியும் பிரத்யேகமாய்த் தாயினிடமே பார்த்தீர்களா? நான் இவ்வியாதியைச் சொஸ்தம் செய்துவிட்டேன். கட்டியைக் கரைத்து விட்டேன்; இன்னும் சில தினங்களில் உங்கள் ஊருக்குக் கொண்டு சென்றதும் பூராவும் கரைந்தே போய்விடுமென்று சொல்

லித் தப்பபிப்பிராயத்தை அவர்களுக்கூட்டி பிரசங்கம் செய்கிறார்கள். ஆனால் உண்மை யெப்படி யிருக்கிறதென்றால் இம்மாதிரி ஈரல் பருத்திருந்தது, சுருங்கி வரும் கேஸ்களில் எல்லாம் என்ன முடிவென்று பார்த்தவளவில் இந்த ஈரல் சுருக்கம் அந்தக் குழந்தையின் அந்திய காலத்தையேக் காட்டுகிறதென்பதை ஷை வைத்தியர்களாவது பெற்றோர்களாவது அறிந்தார்களில்லை. இந்த நிலைமையில்தான் ஈரலில் வலி ஏற்படுகின்றது.

சுரம்:—ஈரல் சுருங்கவாரம்பித்த பிறகுதான் சுரமும் கடுமையாய் வீச ஆரம்பிக்கின்றது. இப்போதைய சூடு மாலை நேரங்களில் 102 அல்லது 103 டிக்ரி இருக்கிறது. சில கேஸ்களில் இக் காய்ச்சல் அந்தி சந்தி இருவேளைகளிலும் இம்மாதிரி ஒரே நிதானத்திலிருப்பது முண்டு.

மஞ்சட்காமாலை:—முதலில் இது ஆரம்பிக்கும்போது கண்ணில் சிறிது மஞ்சள்நிறம் தருகின்றது. வியாதி முதிரமுதிர கண்ணோடுகூட தோலிலும் பிறகு தேகமுழுவதிலுமே கடுமையான மஞ்சள் நிறமேறி விடுகின்றது. தேகமாதியந்தமும் மஞ்சள் என்பது மாத்திரமல்ல; ஒருமாதிரி பச பசவென்று நமைச்சலு முண்டாகும். மூத்திரம் மஞ்சள் நிறமாயிருப்பதோடுகூட குழந்தையின் துணிகளில் ஷை நீர்ப்பட்ட விடமெல்லாம் மஞ்சள் வர்ணமாய்விடுகிறது. மலம் கடும் மஞ்சள் நிறத்தில் (பார்வைக்குப் பச்சென்றிருப்பதுபோலும்) அளவில் அதிகமாகவும் கழிகின்றது. சிறிது நாட் கடந்ததும் மலம் களிமண்போலும், வெண்மை நிறத்திலும் போகின்றது.

## வீங்கும் உறுப்புகள்.

(மகோதரம்) ஜலம் வயிற்றிலிருப்பதாய்த் தெரிகிறது. இது மிகவும் கெட்ட குறி. வயிற்றில் நீர் அதிகமாயிருப்பதில்லை. வயிற்றின் மேலோடிக்கொண்டிருக்கும் (புடைத்திருக்குமென்று முந்தியேச் சொல்லியிருக்கிறோம்.) சில கேஸ்களில் சுவரொட்டியு மகேகமாய்ப் பருத்திருக்கின்றது. நுனியிலிருக்கும் வெண்குரு கடங்கள் அதிகமாயிருக்கின்றது. இந்த நிலைமையில் குழந்தையைப் பார்த்தால் அதிகமாயிளைத்திருப்பதாய்த் தோன்றுகிறதில்லை.

## கடைசி முடிவு.

இந்தச் சிசு மேலு மேலும் வெறுப்பாயும் யாதொன்றிலு மிச்சையின்றியுமாய் விடுகின்றது. இறுதியில் உற்சாகமின்மையும் ஒருவித மயக்கத்திற்கும் ஆளாய் குழந்தை இறந்துவிடுகின்றது. சிற்சில கேஸ்களில் இறக்குமுன் காக்கைவலியைப்போலொத்த சில அங்கசேஷ்டைகள் காணுவதுமுண்டு. அல்லது குழவி மிகவு மிளைத்து சகல சக்தியுமிழந்து கருவிகரணங்களோய்ந்து சாகின்றது. அல்லது இதற்கிடையில் இருமல், கபசுரம் முதலியவைகள் கண்டு இறப்பதுமுண்டு.

## நோய்க் கூறுபாடு.

இதனடியில் வரும் கூற்றுகளும் அடையாளங்களும் இருக்கக் கண்டால் அக் குழந்தைக்குக் கட்டி என்கிற ஒரு வியாதி உளவென்று நிச்சயிக்கலாம்.

இன்ன காரணத்தினுல்தான் இந்நோய் வந்ததென்று கூற முடியாத நிலைமை.

குடும்பத்தில் வேறு குழந்தைகள் இம்மாதிரி கட்டியினு லிறந்துள வென்ற கதை. (சரித்திரம்) கட்டிதானுவென்று சந்தேகிக்கக்கூடிய ஒரு குழந்தையின் வயது 6-மாதத்திற்குமேல் 24-மாதத்திற் குட்பட்ட குழந்தைகள்.

சாவதானமாய் இந்நோய் உடம்பில் பற்றுதல். ஈரல் முதலில் பருத்துப் பிறகு சிறுத்து சுருங்குவது மஞ்சட்காமாலை.

இன்ன காரணத்தினுல் வருகிறதென்று தெரியாத சுரம். சளிபோல் வெளியாகும் மலர்.

பேதிக்குக் கொடுத்தாலொழிய வெளிக்குப் போகாத மலம்.

Differential diagnosis வித்தியாச நிர்ணயம்.

பின்வரும் வியாதியின் கூறுகளும், கட்டி என்னும் வியாதியின் சின்னங்களும் பலவிதத்திலும் ஒத்திருப்பதால் கீழ்வரும் விவரங்களி

-லிருந்து கட்டி என்ப தின்னது, மற்ற வியாதியின் கூறு இன்னது என்று ஸ்பஷ்டமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

## Prognosis. முன் எச்சரிக்கை.

இந்த வியாதி சாதாரணமாய் மூன்று மாத முதல் பதினெட்டு மாதவரையில் இருக்கும்.

ஆனல் சில சந்தர்ப்பங்களில் ஒரு மாதத்திலும் இந்த வியாதி தானு அல்லவாவென்பதும் புரிந்துவிடும்? சிலது இரண்டாண்டு வரையில்கூட இழுக்கின்றது. இவ் வியாதி ஒரு சிசுவைப் பற்றிவிட்டால் அவ் வியாதியைத் தடுக்கவோ அல்லது நிவர்த்திசெய்யவோ சரியான வைத்தியமுறைகளே யில்லையென்றுகூடச் சிலரின் சித்தாந்தம். ஆனல் ஆங்கில வைத்தியர்களாலும், சித்த, ஆயுர்வேத, யுனனி வைத்யர்களாலும் பார்க்கப்பட்ட இதே வியாதியால் பீடிக்கப்பெற்ற 48 குழந்தைகளில் 18 குழந்தைகளுக்குத்தான் பூரா சொஸ்தம் செய்யப்பட்டது. அதாவது 100-க்கு 37-வீதம் ஜெயமும், 63-வீதம் தோல்வியு மேற்பட்டது. 63-வீதம் ஏற்பட்ட தோல்வி மிகவும் ஜாஸ்திதான். ஆனல் மேற்சொன்ன கணக்கில் சரியான வைத்யம் செய்யப்படவில்லை. இதற்குக் காரணம் எதைக்கொடுத்து வியாதியைக் கையால் கிள்ளி எரிவதுபோல் உடனேப் போக்கடித்துவிட வேண்டுமென்ற எண்ணங்கொண்டதனுல் அடிக்கடி முறைகளை மாற்றும் பெற்றோர்களும் மாற்றச்செய்யும் வைத்தியர்களுமேயாம்.

பலமான கண்டிப்புடன் ஆதிமுதலே தாய்ப்பாலுடன் மாத்திரமோ அது கிடையாவிடில் ஆட்டின்பாலோ உணவாகக் கொடுத்து பித்தசலத்தை யுண்டுபண்ணக்கூடிய சில மூலிகைகளையும் கொடுத்து வந்தால் அம்மாதிரி மருந்தளித்த கேஸ்களில், பூராவும் குணப்படுவது திண்ணம். அக் குழந்தைக்கொவ்வாத உணவை நீக்குவதும் அமித ஆகார மூட்டுவதை நிறுத்துவதும் அதிக காரமில்லாத ஈரலிற்கு முன்போல் பழைய உணர்ச்சியை யளிக்கக்கூடிய சில மூலிகைகளைக் கொடுத்தும்வந்தால் கண்டிப்பாய் பூராவும் ரோகம் குணப்பட்டுவிடும். ஆனதால் இவ் வியாதி பயப்படக்கூடியதுதானென்ருலும், ஆரம்ப

முதலே சரியான சிகிச்சை நடைபெற்று வருமானல் நிச்சயமாய்க் குணப்பட்டுவிடும்.

### சிகிச்சை.

### வியாதியைத் தடுக்கும் முறை.

சரியான முறைகளை முன் எச்சரிக்கையாகவே செய்துகொள்ளும் பட்சத்தில் இந்த ரோகத்தை வராமலே அடிக்கலாம்.

தாயின் ஆகாரம்; ஒரு வீட்டில் ஒரு தாயின் குழந்தைகளுக்குக் கட்டிவருவதுண்டென்றால்அத்தாயின் முலைப்பாலின் குற்றங்களைப்பற்றிய சூக்கும இரகசியங்களைத் தெரிந்துகொள்ள முயலவேண்டும். வங்காளம் முதலிய ஸ்தலங்களில் வசிக்கும் ஸ்திரீகட்கு முலைப்பால் மிகவும் குறைவாகவும் அதவாயிருந்தாலும் இருப்பதும் கெடுதலடைந்தும் இருக்கின்றதற்கென்ன காரணமாயிருக்கலாமென்று யோசிப்போமானல் அவர்கள் அநேகமாகப் பித்தவாயு முதலிய வியாதியினல் பீடிக்கப்பெற்று மிகவும் பலமற்ற நிலைமையிலிருக்கிறார்கள். ஆகையால் தன் குழந்தைகளுக்குப் பசுவின் பால், பார்லி, அரிசிக்கஞ்சி, விதேசிய உணவுப் பெட்டிகள் முதலியவைகளைக் கொடுத்துக் கட்டிக்கு வழி தேடுகிறார்கள். அவர்களுக்குப் பால் அதிகமாய்ச் சுரக்கச் செய்வதற்கும், சுரக்கும் பாலில் குற்றமிருந்தால் அதை நிவிர்த்தி செய்வதற்கும் தகுதியான பிரயத்தனம் செய்துதானுக வேண்டும். அவர்களின் தேக சௌக்கியத்தினிமித்தம், நல்ல அவுடதங்களைக் கொடுத்தும், உடம்பிற்குப் பழக்கத்தைக் கொடுத்தும், நல்ல உண்டிகளை யீந்தும், சிகிச்சை செய்யப்பட வேண்டும். மேலும் கூடுமானல் சில சுகவாஸ ஸ்தலங்களில் தங்கியிருக்கவும் செய்தல் நலம். அவர்களை அடிக்கடி தொந்தரை செய்யும் பித்தவாயு அஜீர்ணம் முதலிய வியாதிகளுக்குத் தக்க சிகித்ஸையும் நல்ல ஆகாரங்களுமளித்து வருவதுமாத்திரமின்றி ஈரல் சம்பந்தப்பட்ட வியாதி அவர்களுக்குமிருக்குமானல் அதையுமொழிக்க வழி தேட வேண்டும். அவர்கள் மரக்கறி போசனம் செய்கிறவர்களாயிருந்தால் உளுந்து, பருப்பு முதலியவைகளைக் கொண்டு போஷிக்கவேண்டும். மாமிச போசனிகளாயிருந்தால் கோழிமுட்டை,

நல்ல மீன் வகைத் தாராளமாய்ப் பால் புழக்கம் முதலியவைகளைக் கொண்டு சம்ரட்சிக்க வேண்டும். இவ்விதம் தாயின் உடம்பை நன்ருய்க் காப்பாற்றி அவள் முலைப்பாலை விர்த்தி செய்து, பிறகு ஏற்படும் சிசுக்களிற்கும் சுத்தமானதும், போதுமானதுமான அளவில் கிடைக்கக்கூடிய நிலைமையில் கொண்டு வந்து விட்டால், அக்குழந்தைக்குக் கட்டி என்பதே வராது.

## குழந்தையின் ஆகாரம்.

சிசுவிற்கு ஓராண்டு செல்லும் வரையில் தாய்ப்பாலைத் தவிர்த்து வேறு இதர எந்த வித உணவும் கூடாது. பிரத்யேகமாய் அரிசி, பார்லி முதலிய மாப்பண்டங்களை ஒருக்காலும் கொடுக்கலாகாது. பிறந்த மறு தின முதலே டப்பாக்களிலும் சீசாக்களிலுமடைத்து அந்நிய நாட்டினின்றும் பணம் பறிக்க அழகிய லேபிள்கள் போட்டு இந்திய மார்க்கட்டிற்கு வந்து குவிந்த வண்ணமாயிருக்கும் அளவுக்கு மிஞ்சிய சருக்கரை, மாவு, முதலிய தகாதவைகள் கலந்த பர தேச ஆகார சீசாக்களை, மிளகு, சீரகம், கடுகு, வெந்தயம், நல்லெண்ணெய், நெய் முதலியவைகள் வைத்துக்கொள்வதற்குச் சாதகமாயுள்ளதென்று நினைத்து ஆசைப்பட்டு, மறந்தும் பால் குடிக்கும் சிசுக்களுக்குக் கொடுக்கலாகாது. இப்போது பரந்துவரும் புதிய நாகரீகமென்னவென்ருல், ஒரு குழந்தை பிறப்பதற்காக மருந்து முதலிய முன் சாக்கிரதையானதும், பரம்பரை வழக்கமானதுமான அறைமருந்தென்று சொல்லக்கூடிய அவரவர்களுக்குப் பழக்கமான மருந்து சாமான் வாங்குவதற்குப் போடும் மருந்து சாப்தாவிலேயே பால் பெட்டி ஒன்றும் நிப்புள்ள ரப்பர் குழாயுடன்கூடிய தகரக் குறி மொந்தையில் சிறிய ரகமா யொன்றும் குறித்துக்கொண்டு போய் மருந்துகளுடன் சேர்த்து வாங்கப்பட்டு ஷை பிரசவ அறைகளில் இந்த கண்ருவி சாமானும் பிள்ளையார் போல் முந்தி வந்து உட்கார்ந்திருக்கிறதைப் பார்க்க குழந்தையின் விதிவசத்தைப்பற்றி நினைத்தால் வயிறு எரிகிறது. அரிசி வாங்கி கூட நன்ருய் வயிருர உண்பதற்கு வழியில்லாதவர்கள்கூட கடன் வாங்கியாவது பாற்பெட்டி வாங்கிப் புகட்டுகிருர்கள். இந்த வித உண்பண்டங்கள் பல் முளைத்த பிறகுதான் ஒருக்கால் அத்யாவசியமாய்

நேரிட்டால் கொடுக்கலாம். ஏனெனில் வயதான குழந்தைகளுக்கே யொழிய மிக மிக இளம்பிராயமுள்ள நேற்றுப் பிறந்த குழந்தைகளுக் குக்கூட அல்ல. இந்த உணவூட்டி அதே காரணத்தால் கட்டி வந்த தாக பல ருஜுக்களிருக்கின்றன. தாய்ப் பால்தான் இயற்கையாகவே சிசுக்களுக்கு ஏற்பட்ட ஆகாரம். அதுவேதான் சிசுவுக்குத் தேவை யான அளவு கொடுத்துப் போஷிக்கவும் வேண்டும்.

## சுகாதாரம். சிகிச்சை.

கூடுமானால் இந்த இளம் ரோகியைச் சமதளத்திலிருந்து உயர மான விடங்களுக்குக் கொண்டு சென்று வைத்துக்கொள்ள வேண்டும்.

பரிசுத்த காற்றும், சூரிய வெளிச்சமும், அதிகமான காற்றோ, மழையோ இல்லாத காலங்களில் அக்குழவியை இரண்டு அல்லது மூன்று மணிநேர அவகாசமாவது வீட்டைவிட்டு திறந்த வெளியில் வைத்திருக்கவேண்டும். அது மற்ற நேரங்களிலும் சுத்த காற்றையே சுவாசிக்கும்படியும் செய்யவும் வேண்டும்.

## அப்பியாஸம் (Exercise)

ஒரு திடகாத்திரமுள்ள சிசு தன் கைகால்களை நாலாபக்கங்களிலு மசைத்து அவயவங்களை நன்றாய் இயங்கச் செய்து தேகாப்பியாசம் செய்து கொள்ளுகிறது. பலவித சட்டைகள், அங்கிகள், துணிமணி கள் முதலியவைகளைப் போட்டு அக்குழந்தையி னவயவங்களை இயங் கச்செய்வதைத் தடை செய்யக்கூடாது. அது காலால் தவழ்ந்து குப் புத்துக்கொள்ளும் போதோ, தத்தடியிட்டு நடமாடும்போதோ அவ்வித செய்கையை செய்து கொள்வதற்கு நாமும் உதவி செய்யவேண்டும்.

குழந்தைக்கு சுரமில்லாதிருந்தால் தினமொரு தடவை சமுத்திர ஜலத்தில் குளிப்பாட்டவேண்டும். அல்லது ஸ்நானம் செய்விக்கும் சாதாரண ஜலத்தில் அரை அவுன்ஸ் உப்பைப் போடவேண்டும். அந்த ஜலம் நமது தேகத்தின் சூடுபோல் வெதவெத வென்றிருக்கவேண்டும். குளிக்கச் செய்யும்போது குழந்தையின் உடம்பை ஒரு சுத்தமான கதர்ச் சவுக்கத்தால் தேய்த்து அழுக்கை நன்றாய்க் களையவேண்டும்.

ஸ்நானம் செய்விக்கப்பட்டவுடன் குழந்தையைக் காய்ந்த சவுக்கத்தால் துடைத்து, கம்பளியினல் போத்தவேண்டும். தேகத்தின் கெடுதலான வஸ்துக்களை வெளியிடும் வழிகளில் தோல் மிகவும் பிரதானமான வழியாகையால் அதை மிகவும் சுசிகரமாகவும், பத்திரமாகவும் வைத்துக்கொள்ளவும் வேண்டும்.

நமது தாய்தேசம் மிகவும் உஷ்ணப் பிரதேசமாயிருப்பதனுல் குழந்தைக்கு அடுக்கடுக்காய் பல சட்டைகள் போடவேண்டியதேயில்லை. வயிற்றில் ஒரு கம்பளியிருந்தால் உத்தமம். குழந்தையை ஒவ்வொரு வாரத்திலும் எடை போட்டு அதன் நிறையைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

## வித்தியாசமான ஆகார சிகிச்சை.

ஆகாரத்தினுலேற்படும் தவறுகள் இவ்வியாதிக்கு மிகவும் பிரதானமாகையால், உணவு கிரமமாயும் மிதமாயும், நல்ல யோசனையுடனும் கொடுக்கவேண்டும். குழந்தைக்கு வியாதியினிமித்தம் மாறுதலான ஆகாரமளிக்கும்போது அதின் ஈரல் கெடுதியான நிலைமைக்குள்ளாயிருக்கிறதென்பது ஞாபகத்திலிருக்கவேண்டும்.

## சரியான ஆகாரம்.

பத்து மாதத்திற்குள்பட்ட குழந்தைகளுக்கு 1. தாய்ப்பால். ஒரு குழந்தைக்கேற்பட்டது. அதின் தாய்ப்பாலென்பது என்று பலமுறையும் திருப்பி திருப்பிச் சொல்லிவருவது ஞாபகத்திலிருக்கும். மற்ற எந்த மிருகத்தின் பாலாவது, வேறு இதர ஆகாரங்களாவது இதற்கு (தாய்ப்பாலுக்கு)ச் சமதையாகாது. அதிலுள்ளவைகள் தான் சிசுக்களுக்குச் சடுதியில் சீர்ணிக்கத்தக்கவை. பசுவின்பால் எந்தவிதத்திலும் ஒவ்வாது. அது இயற்கையாகவே அதன் கன்றுக்குட்டிக்கென்று ஏற்கனவே கூறியுள்ளது வாசகர்களுக்கு ஞாபகமிருக்கும். இந்தப் பசும் பாலே அப்படியேக் கொடுக்கலாகாது. வங்கநாட்டில் காட்டில் வசிக்கும் சில சாதியாருடைய குழந்தைளுக்கே இவ்வியாதி கிடையாது. ஏனெனில் அச்சாதிப் பெண்மணிகள் மிகவும் திடசரீரிகள். அவர்களின் சிசுக்களுக் கூட்டுவதற்கு அவர்களிடம் வேண்டியவளவு பால்

போதுமான வரையிலிருக்கின்றது. ஆகையால் அவர்களுக்கு அரிசி, பசுவின்பால் முதலிய இதர உணவூட்ட அவசியம் நேரிடுகிறதேயில்லை. எந்த சாதிப்பெண்கள் அதிக நோவிலடிபட்டிருக்கிறார்களோ அதனிமித்தம் முலைப்பாலும் மிகவும் வற்றிவிடுகிறதோ அந்த வகுப்பார்களினிடையில்தான் இவ்வியாதி நடமாடக் காணலாம். "கினிப்பிக்" என்றதொரு ஜெந்து பிரசவித்தவுடன் குழந்தையைத் தன் தாயினிடமிருந்து வேறுபடுத்தி எப்படி சம்ரட்சித்தபோதிலும், சில நாட்களில் செத்துப் போய்விடுகின்றது. ஆனதால் மிகவும் அபாயகரமான கெடுதல் தாய்க்கிருந்தாலொழிய ஒரு குழந்தைக்கு அதன் தாய்ப்பால் கட்டாயம் 10 மாதம் வரையில் கொடுத்தேயாகவேண்டும். பத்து மாத வரையிலுள்ள சிசுவுக்குப் போதுமான உணவு பதார்த்தம், பிரசவித்த 10 மாதம் வரையுள்ள தாய்ப்பாலில் இருக்கிறதென்பதை ஞாபகத்திலிருத்தவேண்டும். 10 மாதம் கடந்து ஆகாரத்தை மாற்றலாம். சிசுவிற்கு ஓராண்டு ஆகும்போது முலை குடியிலிருந்து குழந்தையை மெள்ள மெள்ள மாற்றவேண்டும். தாய்ப்பால் கெடுதியாயிருந்தால் தாய்க்குத் தக்க வைத்யம் செய்து அதை மாற்றவேண்டும். பாலைச் சுத்திசெய்ய வழி தேடவேண்டும. அப்பால் எவ்வளவுதான் கெடுதலாயினும், காசைக் கொடுத்துப் பாற்காரரிடம் மாவு, எருமைப்பால், சருக்கரை முதலிய கலப்படங்கள் கலந்த விலைப்பாலை விட இது ஒருக்காலும் அவ்வளவு மோசமானதல்ல. மோசமாயுமிருக்காது. எப்படியிருந்தபோதிலும், கால ஆகாரம் தகுந்த சிகிச்சை முதலிய செய்து பாலை சுத்திகரிக்க வேண்டியதுதான். பால் குறைவாயிருந்தால், அதற்குள்ள உபாயங்களைத் தேடி அதிகப்படுத்துவதற்குள்ள வழிகள் எத்தனையோ உள. அவைகளைச் செய்யவேண்டும். தாயின் தேகத்தை நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்தால் பால் தானே உற்பத்தியாய் விடுகிறது.

## செவிலித்தாய்.

எக்காரணத்தைக் கொண்டும் அத் தாயின் பாலை உற்பத்தி செய்யவே முடியாமல் போய்விட்டாலும், அல்லது தாய்க்கு குழந்தைகளுக்கு பாலூட்ட முடியாதபடி வேறு தடைகாரணங்களிருந்தாலும்,

நல்ல சரீரமும் யாதொரு வியாதியுமற்ற ஒரு பாற்காரியை நியமித்து அக்குழவிக்குப் பாலூட்டுவிக்க வேண்டும். தன் தாயின் பாலுக் கடுத்த படி ஒரு குழந்தைக்குச் செவிலித்தாயின் பால்தான் உத்தமமானது.

ஒரு கேஸ்:—ஒருவருக்கு 3 குழந்தைகள் ஒன்றன்பின்னொன் ருய்க் கட்டியா லிறந்துபோயின. அக் குழந்தைகளின் தாய் பித்தவாயு, அசீர்ணம் முதலியவைகளால் பீடிக்கப்பட்டிருந்ததால் பாலே குறைவா யிருந்தது. ஆனல் அக்குழவிகளுக்குப் பசும்பால் பிறந்தகால முதலேக் கொடுபட்டு வந்தது. நான்காம் குழந்தை பிறந்தபோது இதைப்பற்றி ஒரு டாக்டரிடம் ஆலோசிக்கப்பட்டது. அவரனுமதியின்படி ஒரு செவிலித் தாய் ஏற்படுத்தப்பட்டது. அதே சமயத்தில் அந்த நான்காம் குழந்தையின் சிறிய தகப்பனுக்கு ஒரு குழந்தை பிறந்து ஒரு வாரத் தில் இறந்துவிட்டது. ஆகையால் அக்குழந்தையின் சிற்றம்மை இக் குழந்தையைத் தான் பாலூட்டி வளர்ப்பதாய் ஒப்புக்கொண்டாள். இக்குழந்தைக்கு அந்தப் பயங்கர வியாதிவரவே யில்லை. சில தினங் கட்கு முன் அதே குழந்தையை நாங்கள் பார்க்க இடமுண்டாயிற்று. அப்போது இந்தக் குழந்தைக்கு வயது 5. நல்ல திடசரீரம். செவிலித் தாயெனும் பாலூட்டும் தாய் ஏற்படுத்தும்போது கவனிக்கவேண்டிய சில முக்ய அம்சங்களென்ன வென்ருல், அவள் நடை, உடை, பாவனைகளெல்லாம் பரிசுத்தமானவையா வென்பதைக் கவனிக்க வேண்டும். அவளின் சகவாசங்கள் மிகவும் நல்லவைகளாயுளவா வென்பதையும் கவனிக்கவேண்டும். க்ஷயம் முதலிய கெட்ட வியாதிக ளெதுவுமே இருக்கக்கூடாது. அவளிடம் பால் தாராளமா யிருக்க வேண்டும்.

## பால்போட்டி வளர்த்தல் (Hand feeding)

தாய்ப்பால் கொடுப்பதற்கு அத்யாவசியமான தடங்கலிருந்தா லொழிய, நல்ல திடசரீரியான செவிலித்தாயும் முற்கூறியபடிக் கிடைக் காமற் போனுலும் தான் ஒரு குழந்தைக்குக் கையால் பால் போட்டி வர வேண்டும். தாய்ப்பால் குறைவாயுளதென்ற ஒரு காரணத்திற்காக மாத்திரம், தாய்ப்பால் கொடுப்பதை நிறுத்துவது கூடாது. பின்வரும் காரணங்களால் குழந்தைக்கு முலைப்பால் கொடுப்பது உசிதமல்ல.

1. தாய்ப்பாலிலுள்ள கெடுதல்கள்.

2. ஸ்தன்யத்தில் பெரியதொரு சிரங்கு.

3. குழந்தையின் ஸ்தன்யபான காலத்திலேயே தாய் கர்ப்பவதியாதல்.

4. க்ஷயம், பெரியம்மை, பெண்பிள்ளை வியாதி முதலியதொத்து வியாதிகளில் தாய் பீடிக்கப்பட்டிருத்தல்.

5. தாய் மருந்துண்ணும் காலங்களில்,

6. முறை சுரம், கிரஹணி முதலியவைகளிலகப்பட்டு தாய்க் கொஞ்சமும் பாலூட்டச் சக்தியற்றிருத்தல்.

ஒரு குழந்தைக்குக் கைப்பால் போட்ட வேண்டுமென்றால் கீழ் வரும் வகைகளில் கொடுக்கலாம்.

1. தாய்ப்பால் போல் செய்த அல்லது மருந்து கலந்த பசுவின் பால். 2. ஆட்டின் பால், ஏ. எக்காரணத்தைக் கொண்டும் கறந்தபடியே யுள்ள பசுவின் பாலைப் புகட்டலாகாது. ஏனெனில் பசுவின் பாலில் தாய்ப்பாலைவிடப் பெரிய தயிர்க் கட்டிகள் வயிற்றில் பெரிதாய் கட்டை கட்டையாய்த் திரிந்து போகின்றது. பசுவின் பாலில் தாய்ப் பாலிலுள்ளதை விடப் பால் சருக்கரை குறைவு. ஆனதினாலேயே சுயப்பசுவின் பால் கூடாதென்கிறோம். கொடுக்கப்படும் பால் அப்போதே கறந்ததானால் நல்லது. ஒரே பசுவின் பாலையே எப்போதும் கொடுத்து வந்தாலும் விசேஷந்தான். பசுவின்பால் கொடுப்பதற்கு முன்பே பசு மிகவும் நல்ல சரீரத்துடனுளதா, அதற்கு க்ஷயம் முதலிய நோய்களுண்டா, அது தின்னும் புற்கள் சுத்தமானவைகளா, சுத்தமான பாத்திரத்தில் பால் கறக்கப்படுகின்றதா, கட்டுத்தறி சுத்தமாயுளதா, கறந்தபாலில் ஈ, தூசி முதலியவைகள் விழாதபடி மூடி வைக்கப்பட்டுளதா, என்பனவெல்லாம் கவனிக்கவேண்டும். நமது இந்தியாவின் சீதோஷ்ணவஸ்தையினால் பாலைக் காய்ச்சாமலே வைத்

திருந்தால் அது கெட்டுவிடுமென்பதும் உங்களுக்குத் தெரிந்ததுதான். பால் கொதிக்கவைக்கவேண்டிய அவச்யமேயில்லை. பாலைக் காய்ச்சும் போது கொதிக்கச் சில நிமிஷம் முன் இறக்கிவிடலாம். பசுவின் பாலைத் தாய்ப்பாலின் குணத்திற்குக் கீழ்வரும் முறையினால் கொண்டு வருவது உத்தமமானது.

1. ஜலம் கலக்கவேண்டும். 2. ஆடை (கிரீம்) இதில் சேர்க்க வேண்டும். 3. பாற் சருக்கரை (Lactose) சேர்க்கவேண்டும். 4. சுண்ணும்பு தெளிவுநீர் சேர்க்கவேண்டும். 5. ஒரு அவுன்ஸ் பாலிற்கு ஒரு கிரெய்ன் வீதம் "சோடியம் சிட்ரேட்" என்ற மருந்தை இதில் கலக்கவேண்டும்.

"தாய்ப்பாலைப்போல் பசும்பாலைச் செய்து கொடுப்பதற்கு"

| சேர்க்கவேண்டிய பதார்த்தம். | வயது. | | | | |
| --- | --- | --- | --- | --- | --- |
| | முதல் இரண்டு வாரங்கட்கு. | 3—4 வாரங்களில் | 2 முதல் 3 மாத வரையிலும் | 3 முதல் 5 மாதம் வரையில் | 5 முதல் 12 மாதம் வரையில் |
| பால் | ஒரு அவுன்ஸ். | $1\frac{1}{2}$ அவுன்ஸ். | $2\frac{1}{2}$ அவுன்ஸ். | 7 அவுன்ஸ். | 12 அவுன்ஸ். |
| கிரீம் | 1 ,, | $1\frac{1}{2}$ ,, | $2\frac{1}{2}$ ,, | 3 ,, | $4\frac{1}{2}$ ,, |
| லாக்டோஸ் | $\frac{1}{2}$ ,, | $\frac{3}{4}$ ,, | 1 ,, | 1 ,, | $1\frac{1}{2}$ ,, |
| சுண்ணும்புஜலம் | $\frac{1}{2}$ ,, | $\frac{3}{4}$ ,, | 1 ,, | $1\frac{1}{4}$ ,, | 2 ,, |
| சுத்தஜலம் | $7\frac{1}{2}$ ,, | 11 ,, | 14 ,, | 13 ,, | 14 ,, |

3. இவைகளைக் கணக்குப்படி அப்போதைக் கப்போது செய்து பத்திரமாய் மூடிவைத்துக் கொள்ளவேண்டும். அதை உபயோகிக்கும் போது நமது தேகத்தின் சூடத்தனைச் சூட்டில்தான் புகட்ட வேண்டும்.

**இவ்விதம் தயார் செய்து கொடுக்கப்படும்** பாலிற் கேற்படும் கெடுதல்கள். தன் வீட்டுப் பசு அல்லவானுல் இந்தக் கணக்கை யனுசரிப்பது கஷ்டம்தான். ஏனெனில் பால்காறனிடம் வாங்கும் பாலில் எருமைப்பால், சருக்கரை, மாவு முதலியவைகள் கலந்திருப்ப தால் அதற்கு எந்தக் கணக்கின் பேரில் மேற்சொன்னபடி தயார் செய்வதென்பது சிரமந்தானே ?

2. **ஆட்டின்பால்:**—ஆட்டின் பால் கிட்டத்தட்ட பசுவின் பாலுக்குச் சமதையாகவே யிருக்கிறது. ஏறக்குறைய அதே நேரத் திற்குள் அந்த ஆவகாசத்திலேயே இதுவும் சீர்ணசத்திக்கு வருகின்றது.

| பால் இனங்கள். | 100 பாகத்திற்கு. | | | | |
|---|---|---|---|---|---|
| | உணவுப் பொருள். | நெய் வஸ்து. | மாப்பண்டம் அல்லது சருக்கரை. | உப்பு வஸ்து. | ஜல அம்சம். |
| தாய்ப்பால் | 3·42 | 3·33 | 4·5·5 | 0·21 | 88·9 |
| ஆட்டின் பால் | 3·79 | 4·34 | 3·78 | 0·65 | 86·85 |
| கழுதைப் பால் | 3·57 | 1·85 | 4·50 | 0·55 | 89·01 |
| பசும்பால் | 4·21 | 3·82 | 3·67 | 0·71 | 87·5 |
| எருமைப்பால் | 4·0 | 7·10 | 4·0 | 0·8 | 84·1 |

b. ஆட்டின் பாலில் ஊண்பண்டம் அதிகமாகவே யிருக்கின்றது. ஆனதால் அது ஈரல் வியாதிக்கு (விரோதி) சிலாக்கியமானது இது தயிரானல் பெரிய பெரிய துண்டுகளாய்த் திரைகிறதில்லே. ஆட்டின் பாலில் கொழுப்பு அமிசம் அதிகமாகவிருப்பதால், அதனிடம் ஜலம் சேர்க்கத்தான் வேண்டும்.

**கழுதைப்பால்**—இதையும் ஆட்டின் பாலைப் போலவே கிட்டத்தட்ட எல்லாவிதத்திலும் தாய்ப்பாலிற்கு நிகராகவே சொல்லலாம். இதற்கு மலத்தைச் சிறிது இளகச் செய்வதற்குச் சக்தியுளதாகையால் இந்த வியாதிக்குச் சிறந்ததுதான். ஆனல் இதில் ஒரு தோஷ மிருக்கிறது. கறந்தச் சிறிது நேரத்திற்கெல்லாம் திரைந்துபோய் விடுகிறது. என்ருலும் இதையும் தடுக்கக் கொஞ்சம் "சோடா பைகார்ப்" என்ற மருந்தைச் சேர்த்தால் போதுமானது. குழந்தைக்குக் கையால் புகட்டி உணவளிக்கும் காலத்தில், ஆரஞ்சுப்பழம், எலுமிச்சம்பழம் இவைகளின் ரசத்தை ஜலத்தில் கலந்து தினமொருதடவை உபயோகிக்கவேண்டும்.

பி. குழந்தைக்குப் பத்துமாதத்திற்கு (பல் முளைக்கும் காலம்) மேல் 18 மாதத்திற்குள் கொடுக்கவேண்டிய ஆகாரங்கள். இப்பொழுதும் குழந்தைக்கு அடிக்கடி ஈரலை தொந்தரைசெய்யும் ஆகார பதார்த்தங்களைக் கொடுக்கக்கூடாது. இதுவரையில் பசுவின்பால் புகட்டப்பட்டு வந்தாலும், இது முதல் அதையும் திருத்திவிடவேண்டிய தவச்யம். அதற்குப் பதிலாக சுத்த ஆட்டின் பாலேக் கொடுபடவேண்டும். தித்திப்பு வஸ்துக்கள், மாவு பண்டங்கள் கொடுத்துவந்திருந்தாலும், அதையும் நிறுத்திவிட வேண்டியதுதான். அடியில் வரும் உணவுகளைக் கொடுக்கலாம்.

1. ஆட்டின் பால் அல்லது கழுதைப்பால் இதுதான் அக்குழந்தைக்கு முக்கிய ஆகாரமா யிருக்கவேண்டும்.

2. **பழச்சத்துக்கள்**:—மாதுளம்பழம், ஆரஞ்சு, எலுமிச்சை முதலியவைகளின் சாற்றைப் பிழிந்து ஜலம் சேர்த்துக்கொடுக்கலாம். தினம் அரை அவுன்சாவது கொடுக்க வேண்டும். 3. சீக்கிரமாக

சீர்ணிக்கக் கூடிய மீன் சத்து முதலியதும் கொடுக்கலாம். ஆனால் மாமிச போஜிகளல்லாத இந்துக்களுக்கு உளுந்து, பருப்பு முதலியவை களை ரசம்போல் ஒரு சத்தாகச் செய்து சீர்ணமாகத் தகுந்த அளவில் கொடுத்து வர வேண்டும். மாமிச போசனம் செய்கிறவர்கள் புதிதாக மீனை வாங்கி வந்து துண்டு துண்டாய்ச் செய்து ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் ஜலத்தில் இத்துண்டுகளைப் போட்டு, அந்த ஜலம் சிறிது நேரத்தில் அம்மீன் ரத்தத்தினால் சிவந்ததும், இந்த ஜலத்துடனே இதை நன்றாய்க் கொதிக்கவைத்து மஞ்சள், உப்பு சீரகம் இதுகளைக் கொஞ்சம் சேர்த்து, நன்றாக வடிக்கட்டி இச்சத்தை வைத்துக்கொண்டு ஆகாரம் கொடுக்கும்போது ஒவ்வொரு வேளையிலும் இதிற்கொஞ்சம் கொடுத்து வரலாம். மரக்கறி மாத்திரம் உண்ணும் சைவ குடும்பங்களில் நல்ல துவரம்பருப்பு முதலிய பருப்புரசம் செய்து கொடுக்கவேண்டும். மைசூர் இராச்சியத்தில் உள்ள சைவர்களான ஹிந்துக்கள் தங்கள் குழந்தைகளுக்கு சோளத்தி (Oates) ன் சத்தைக் கொடுத்து வருகின்றார்கள். அவர்களின் சிசுக்களுக்கு இந்தப் பொல்லாத 'கட்டி என்கிற வியாதியே கிடையாது. குழந்தை பிறந்த 18 மாதங் கடந்து தர வேண்டிய உணவுகளே முன்சொன்னவைகளென்பதும் ஞாபகமிருக்க வேண்டும். குழந்தை சௌக்கியப்பட்டு வருங்காலையில் கிட்டத்தட்ட இரண்டு பிராயமானதும், சன்னஞ் சன்னமாய் கட்டியான உணவூட்ட ஆரம்பிக்கலாம். உருளைக்கிழங்கை நன்றாக வேகவைத்து, அதிலுள்ள மாவு அம்சத்தைப் பாலுடன் கலந்து அவற்றையும் சீர்ண சக்தியையும் கவனித்துச் சிறிது சிறிதாயதிகப்படுத்திக் கொடுக்கலாம். அல்லது புழுங்கல் நொய்யரிசியை நன்றாய் வடித்து அதனுடன் இளங்காரமுள்ள குழம்பைச் சேர்த்துக் கொடுக்கலாம். மாமிசபோசனிகள் எளிதில் சீர்ணிக்கக்கூடிய மீன் வகைகளைப் பாகம் செய்து கொடுக்கலாம்.

## கூடாத உணவுகள்.

எல்லாப் பற்களும் முளைக்குமுன் சவ்வரிசி, மாவு, பிஸ்கோத், ரொட்டி, அப்பம் முதலியவைகளைக் கொடுக்கவேகூடாது. தனிப் பசும்பால், எருமைப் பால் கலந்த பசுவின் பால், மாவு,

சருக்கரை முதலியவை கலந்ததும் எந்தவிதமானப் பரதேசப் பெட்டி உணவுகளும் கூடாது. வயது வந்தவர்களுக்கென்று செய்து வைத்துள்ள தின் பண்டங்களில் ஒரு துண்டு கூடக்கூடாது. அவர் களுக்குத் தயாராகும் ஆகாரங்களும் ஒத்துக்கொள்ளாது. தேத்தண் ணீர், காபி முதலிய போதை தரும் பானங்கள் யாவுமே கூடாது.

## உணவளிக்கும் சரியான காலம்.

இக்கட்டிக்கு முக்கிய காரணம் ஒரு குழந்தைக்கு அதிக உண வளித்தல். ஆனதால் குழந்தை சிகிச்சையிலிருக்கும்போது, அமித ஆகாரத்தைக் கொடுக்காமலேயே, மித ஆகாரத்திலேயே ஞாபகமிருக்க வேண்டும். ஆகார மதிகரிப்பதனுலேயே, ஈரலிற்கு அதிக வேலை ஏற் படுகிறது. சரியான காலங்களில் உணவளிக்கப்படாததினுலேயே ஒரு குழந்தைக்கு மிதமிஞ்சிய ஆகாரமளிக்க இடம்பாடாகின்றது. தாய் கள் வரையரையான குறிப்பிட்ட இந்த நேரத்தில்தான் உணவளிப்ப தென்ற நியதியேயின்றி அழும்பொழுதெல்லாம் ஊட்டித் திணிக்கக் கூடாது. அழுதால் அது பசி அழுகையா? அல்லது வயற்றுவலி அழு கையா? என்று சரியானபடி தெரிந்துதான் அதற்குத் தக்கபடி நடக்க வேண்டும். முதல் மாதத்தில் ஒரு குழந்தைக்கு இரண்டு மணி நேரத் திற் கொருதடவையாகக் கொடுக்கலாம். காலக்கிரமத்தில் ஆகாரம் கொடுபட்டிருக்கிற நேரத்திற்கும், இனி கொடுக்க வேண்டிய காலத் திற்குமுள்ள அவகாசத்தை நீடிக்க வேண்டும். இவ்விரண்டிற்கு மிடையில் உள்ள நேரத்தில் யாதொருவித தின்பண்டங்களும் கொடுப் பது கூடாது. குழந்தையின் வயறு எப்பொழுதும் பூராவாக நிறைந் திருக்கக்கூடாது; பகற் காலங்களில் உணவூட்டும் குறிப்பிட்ட நேரத் தில் அது தூக்கத்திலிருந்தாலும் எழுப்பிக் கொடுக்கத்தான் வேண் டும். தூங்கும் குழவியை எழுப்புவதென்பது தொந்தரவாய்த் தோன்றி னும், அதன் திரேக சௌகரியத்தையும், பின்னும் பல உசித கார ணங்களையும் கொண்டும், சரியான காலத்தில் அதற்கு உணவு தேவை யென்ற நியதியையு முத்தேசித்து இம்மாதிரி செய்ய வேண்டியது உத்தமமான தென்பது மாத்திரமின்றி, ஆகாரப் பழக்கம் சரியானபடி

ஏற்படுகிறது. இரவு பனிரெண்டு மணிக்குப் பிறகு யாதொரு உணவு மளிக்கக்கூடாது. மேலும் 12 மணி முதல் 6 மணி வரையிலுள்ள தூக்கத்தைக் கெடுக்காமலிருப்பதும் நல்ல முறையல்லவா? உணவளிக்கும் அளவும் ஒழுங்காயிருக்க வேண்டும். குழந்தைக்குத் தாய்ப்பால் குடிக்கப் பிரியமில்லாத சமயத்தில் வலுவில் முலைப்பால் புகட்டவும்கூடாது. ஒருதடவையில் ஒருகுழந்தை 10 நிமிஷநேரம் தாய்ப்பால் அருந்துவது போதுமானது. குழந்தை குடித்த பாலை வாந்தி செய்வது அதிகப் பால் குடித்ததினலேதான் என்பது ஞாபகத்திலிருக்கவேண்டும். சராசரி ஒரு குழந்தையின் வயற்றினளவு பிறந்த சமயத்தில் $1\frac{1}{4}$ ஒன்றே கால் அவுன்ஸ்தான். இரண்டாவது வாரத்தில் ஒன்றரை அவுன்ஸ். முதல் மாதம் இரண்டு அவுன்ஸ். நான்காம் மாதம் ஐந்து அவுன்ஸ். ஆருவது மாதம் ஆறரை அவுன்ஸ்.

# ஆகார நியமம். (Feeding Table)

## ஆகாரம் ஊட்டவேண்டிய சரியான காலங்கள்.

| வயது. | கொடுக்க வேண்டிய அளவு. | இரண்டு ஆகாரங்களுக்கு மிடையேயுள்ள நேரம். | அநேகமா யூட்டவேண்டிய காலம். | | |
|---|---|---|---|---|---|
| | | | காலை. | மாலை. | இரவு. |
| முதல் இரண்டு வாரம் | 1 அவுன்ஸ் | 2-மணி நேரம் | காலை 6. 8. 10. 12. மணிகள் | 2. 4. 6. மணிகள் | 8. 10. 12. மணிகள் |
| 3 முதல் 4 வாரம் | $1\frac{1}{2}$ ,, | Do | Do | Do | Do |
| 2-வது மாதம் | 2 ,, | $2\frac{1}{2}$ ,, | 6 $8\frac{1}{2}$ & 12 மணிகள் | $1\frac{1}{2}$. 4. $6\frac{1}{2}$ மணிகள் | 9. $11\frac{1}{2}$ மணிகள் |
| 3-வது மாதம் | 3 ,, | Do | Do | Do | Do |
| 4-வது மாதம் | 4 ,, | 3 ,, | 6. 9. 12. | 2. 6. | 9. 12 |
| 5-வது மாதம் | 5 ,, | Do | Do | Do | Do |
| 6-வது மாதமுதல் ஒரு வயது வரையில் | 6 ,, | Do | Do | Do | Do |

12 மாதத்தின் பிறகு குழந்தைக்கு தினமொன்றுக்கு 5 ஆகாரம் கொடுக்கவும். அதாவது காலை 6-மணி, 8-12 மாலை 4 படுக்கைக்கு முன்பும்.

## மருந்து வைத்ய முறைகள்.

1. இதன் கீழ்வரும் முறைகள் இதன் கிரந்தகர்த்தாவினுல் தள்ளப்பட்டது:—

1. சுரத்தை நிறுத்தக்கூடிய மருந்துகளில், கொயினன் பாடாணம் சாலிஸின் முதலியவைகளை அநேக டாக்டர்கள் கொடுத்துப் பார்த்து உபயோகமில்லையென்று தள்ளப்பட்டது.

2. வியர்வை யுண்டுபண்ணக்கூடிய அம்மோனியம் அஸடேட், நைட்ரஸ், ஈதர் இவைகளும் தள்ளுபடி செய்யப்பட்டது.

3. ஈரலிலிருக்கும் துர்த்தசையைக் கரைத்து விடுமென்று நினைத்துப் பல வைத்தியர்களால் பொட்டாசியம் ஐயோடேட் கொடுக்கப்பட்டது. அதில் யாதொரு பிரயோஜனமும் காணவில்லை. பித்த சலத்தை யுற்பத்திசெய்யக்கூடிய அம்மோனியம் குளோரைட், இப்பிகாக்கோனு முதலியவைகளைப் பன்முறையும் கொடுத்துப் பார்த்தும் யாதொருவித குணமும் தரவில்லை. ஆனல் டராக்ஸகம், ஈயோனிமின், ஐரிடன் இவைகள் கொடுத்ததில் சில கேஸ்களில் அனுகூலம் கிடைத்தது. காளைமாட்டின் பித்த ஜலமும், நாட்டு வைத்தியர்கள் உபயோகிக்கும் கோரோசனையோ இதற்கு யாதொரு வித அனுகூலத்தையும் கொடுப்பதில்லை. பித்தசலத்தை யுற்பத்தி செய்யும் மருந்துகளில் அதிக சக்தியுள்ள மருந்துகள் ஒன்றுமே இதற்குக் கூடாது. புதிதாய்ப் பிடித்த பசுவின் மூத்திரம் இதற்குகந்த தென்று சில வைத்தியர்கள் கையாடுகிறுர்கள். ஆனல் டாக்டர் ஆர். வி. அஜன்கர் (இவர் டய்டாய்க்காரர்) ஒரு குழந்தைக்கு ஒரு டசுங்கன்றின்

மூத்திரத்தைக் கொடுத்ததில் ஈரல் அதிகம் பெருக்கவில்லை யென்றும் சுருங்கவாரம்பித்ததென்றும், நீர் சுத்தமா யிறங்கிற்றென்றும், சுரம் நின்றுவிட்டதென்றும் தெரிவித்திருக்கிறார். ஆனால் சில நாட் சென்று ஷி குழந்தைக்கு இவ்வியாதி திரும்பவும் வந்ததென்றும் அதனலக்குழவி இறந்ததென்றும் சொன்னர். இதிலிருந்து கோ மூத்திரம் இதற்கனுகுணமானதல்லவென்று அவரே அபிப்பிராயமளித்து விட்டார். இரசம், கந்தகம், செம்பு, தங்கம், வெள்ளீயம் முதலியவைகளும் பித்தசலத்தையுண்டுபண்ணக்கூடியதும் பேதியை யுண்டுபண்ணக்கூடிய சக்தி வாய்ந்ததுமான சில மூலிகைகளும் சேர்ந்த "ஜெய மங்கள ரசம்" என்ற மருந்தையும், இரசம், கந்தகம் முதலிய சேர்ந்த "லோகநாதரசம்" என்றதையும் அநேக கவிராஜர்களான கல்கத்தா நாட்டு வைத்தியர்கள் கொடுத்துப் பார்த்ததில் ஒருவித பலனுமுண்டானதாய்த் தெரியவில்லை.

நமது சிகித்ஸா கிரமங்களும் முறைகளும் A. கொஞ்சமாக மலபந்தமிருக்கும் சமயத்தில் பேதிக்குக் கொடுக்கவேண்டிய மருந்துகள் ரூபார்ப், காஸ்காரா ஸக்கரசா, ஹைட்ராஜ்கம் கிரீட்டா, கலோமல் முதலிய மருந்துகள் கொடுக்கலாம். மலபந்தம் அதிகமாயுள்ள சமயங்களில் பின் வருவனவற்றைக் கொடுத்து மலபந்தத்தை நிவர்த்திசெய்வதோடு கூட குடலிலிருந்து விஷங்கள் இரத்தத்திற் கலக்காமலும், மஞ்சட்காமாலை வராமலும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்ளவேண்டும்.

1. ஸிலென்பர்கேட்டிவ். ஸோடியம்பாஸ்பேட், ஸோடியம் ஸல்பேட் இவைகள் முதலில் தினநிதமும் பிறகு ஒன்றுவிட்டு ஒரு நாளைக்கும் கொடுக்கவேண்டும்.

2. மினரல் வாட்டர்:—ஹன்யாடி ஜானஸ் வாட்டர் என்னும் ஜலமும் கால் அவுன்ஸ் வீதம் கொடுத்துவர வேண்டும்.

அல்லது கால்ஸ்பாட் உப்பிலும் பிரதிதினமும் 15 கிரெயின்ஸ் வீதம் வெந்நீரில் கரைத்துக் கொடுக்கவேண்டும்.

3. 15 அல்லது 20 துளி கிளிஸரெயின் பஸ்திபாக மலத் துவாரத்தினுள் பீச்சவேண்டும்.

B. கால்மேக் என்னும் மருந்து கிரமமாய்ப் பித்தநீரை உற்பத்தி செய்யும் தன்மையுள்ளது மன்றி கெட்டுப்போயிருக்கிற ஈரலின் அணுக்களைத் திரும்பவும் உயிர்ப்பித்து உற்பத்தி செய்யும் தன்மை வாய்ந்த சக்தியு மிதற்கிருக்கின்றது. இது ஈரல் வேலையை நன்றாக்கு வது, மல பந்தத்தைத் தடுப்பது, சுரத்தை நிறுத்துவது முதலிய அரிய தொழிலைச் செய்கிறது. இதைப் புதிதாய்க் கஷாயம் செய்து கொடுக்க வேண்டும். ஏனெனில் கடையிலுள்ள எக்ஸ்ட்ராக்ட் சத்து அவ்வளவு நன்றாய் வேலைசெய்யவில்லை. இம்மருந்தை இரண்டு வயதிற்குட் பட்ட குழந்தைகளுக்கு 5 முதல் 10 சொட்டுவரையிலும் இரண்டரை வயதிற்கு மேல் மூன்றரை வயதிற்குட்பட்டவர்களுக்கு ஜலத்தில் கலந்து ஒருநாளைக்கு 3 வேளையாக 15 சொட்டுமுதல் 20 சொட்டுவரை யில் கொடுக்கலாம். வங்காளத்தில் உள்ள வீடுகளில் கை மருந்தாய்க் கொடுத்துவரும் ஆலி மாத்திரையில், கால்மேக் ஓமம், பெருஞ்சீரகம், ஏலம் முதலியவைகள் சேர்ந்திருக்கின்றன. இதுவும் ஒரு நல்ல முறைதான்.

மெமோராண்டி காஸாய்வியா, என்னும் மருந்தின் இலையைச் சார்பிழிந்து கொடுத்துப் பார்த்ததில் பல கேஸ்களிலும் மிகவும் அநு கூலமேச்சண்டோம். இது ஈரல் தொழிலைச்சுத்தமாயும், நன்றாயும்செய் வதுடன், மலத்தையும் சரிவரத் தாராளமாய்க் கழிக்கின்றது. ஒரு வயது குழந்தைக்கு 60 சொட்டு (ட்ராம்) கொடுக்கப்பட்டது.

மஞ்சட் காமாலை ஆரம்பமாயிருந்தால் முன் சொன்ன மருந்துகளன்னியில் பித்தசலத்தை உண்டுபண்ணக்கூடிய பேதி மருந்துகள் கொடுபட வேண்டும். அதிக ஜுரத்துடன் மஞ்சட்காமாலையுமிருந்தால் உப்பு சம்பந்தமான பேதி மருந்துகள் கொடுக்க வேண்டும். கால், கை வீக்கமாயிருந்தால் உப்பு பேதி மருந்தேக் கொடுக்க வேண்டும். அதோடுகூட ஆவிப்புகைபிடித்தல் (வேது பிடித்தல்) அச்சிறு நோயாளிக்கு மிகவும் குணத்தைத்தரும். சுபம்.



## ஆராய்ச்சி செய்த கேசுகளின் விபரம்,

| நெ. | பெயர், மதம், சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக்கொடுத்த ஆகாரக் கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
|---|---|---|---|---|
| 1. | ரீபா, ப. பவின் முதல் குழந்தை, ஹிந்து பிராமணர், பெண் 8 மாதப் பிராயம். | தாய்த் திடகாத்திரமாயிருந்தும் குழந்தைக்குச் சுத்த பசுவின் பாலே மிதமாய்ப் புகட்டப்பட்டது. | தாய்ப் பால் மாத்திரம் கால்மேக் G என்னும் மருந்து | செளக்கியப் பட்டது. |
| 2. | பி. கே. ஜியின் முதற் குழந்தை, ஹிந்து, பிராமணர், ஆண், ஓராண்டும் ஒரு மாதமும். | இப்பருவத்தில் தாய் 2-வது கருத்தரித்தாள். தாய்ப் பால், பசுவின்பால், சாதம். | தாய்ப்பால் நிறுத்தப்பட்டது. சிசுவிற்குப் பசுவின் பாலும் சாத்தியும் கொடுபட்டது. | 4ம் த்திற்குப்பிறகு இறந்துவிட்டது. |
| 3. | பி. கே. ஜியின் இரண்டாவது குழந்தை, ஹிந்து, பிராமணர், பெண் 11 மாதத்தில். | தாய்த் திடகாத்திரி. தாய்ப் பால் கொடுத்தால் ஒருக்கால் கட்டி வந்துவிடுமோவெனப் பயந்து ஆதி முதலே பெட்டி ஆகாரங்கள் கொடுபட்டு வந்தன. | புட்டிப் பால் முதலிய ஆகாரங்களே திரும்பவும் கொடுபட்டு வந்தன. மருந்து கால்மேக். | 3வதும் தில்குழந்தைஇறந்துவிட்டது. |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | காலா, வி. எம். எஸ். குழந்தை, ஹிந்து பிராமணர், ஆண், 10 மாதம். | தாய் அசீரண வியாதியுடையவள். இதற்கு முன் ஒரு குழந்தைக் கட்டியினலிறந்திருக்கிறது. ஆகாரம் பசுவின் பாலுடன் பார்லி சேர்த்து சில நேரங்களில் தாய்ப்பாலும். | புதிய சுத்த ஆட்டின் பால் பித்த நீரை உற்பத்தி செய்யும் மருந்துக் கொடுக்கப்பட்டது. | வியாதி குணப்பட்டு விட்டது. |
| 5. | புட்டி எ. டியின் முதற் குழந்தை, ஹிந்து, பெண், 1-வருடம், 1-மாதம். | தாய்ப் பால், பசுவின் பால், சாதம், தித்திப்பு மிட்டாய்ப் பட்சணங்கள். | தாய்ப் பால் நிறுத்தி சாதியும் பசுவின் பாலும் கொடுபட்டு வந்தது. | 8மீ த் தின் பின் இறந்து விட்டது |
| 6. | மாதன் வி. பி. யின் குழந்தை, ஹிந்து பிராமணர், ஆண், 1-வருடம், 1-மாசம். | தாய் நல்ல தேகம். முந்தின குழவிகளெல்லாம் சௌக்கியகிமாயிருக்கிறது. இதற்கு மட்டும்பசுவின்பால் மிதமிஞ்சிப் புகட்டியது. மதனுக்குப் பிரகுள்ள 2 குழவிகளுக்கும் இவ்வியாதி வரவே யில்லை. | பசுவின் பால் நிறுத்தப்பட்டது. தாய்ப் பால் மட்டும் கொடுத்து வந்தது. | சௌக்கியமாய் விட்டது. |
| 7. | கோகா கே. ஜியின் குழந்தை, ஹிந்து ஆண், 9 மாசம். | தாய்ச் சூதக வாயுவினல் பீடிக்கப்பட்டிருந்தாள். முலைப் பால் கிடையாது. பசுவின் பால் மட்டும் கொடுத்து வந்தார்கள். | பசுவின் பால் நிறுத்தப்பட்டது. புட்டிப் பால் முதலிய பரதேச உணவு கொடுபட்டது. | 5வதுமீ த்தில்இறந்தது. |

| நெ. | பெயர், மதம், சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக்கொடுத்த ஆகாரக் கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
| --- | --- | --- | --- | --- |
| 8. | கோட், பி. கேயின் குழந்தை, ஹிந்து, ஆண், 7 மாசம். | தாய் அசீரண வியாதிக்காரி. முன் இரண்டு குழந்தைகள் இதே வியாதியாலிறந்தது. குழந்தைக்குப் பசுவின் பாலும், பார்லியும், தாய்ப்பால் மிகவும் குறைவாகவும் கொடுபட்டது. | புதிய ஆட்டின் பாலும், கால் மேக் என்னும் மருந்தும். | சௌக்கியப்பட்டு விட்டது. |
| 9. | கூகி, கே. பியின் குழவி, ஹிந்து, பெண், 7 மாசம். | தாய் இறந்தாள். குழந்தைக்குப் பசுவின் பாலும் பார்லியும். | விதேசியப் பெட்டி ஆகாரம் | 4ஞீ சென்று இறந்தது. |
| 10. | நந்து, எல். டிக் குழவி, ஹிந்து, ஆண், 1-வயதும் 2 மாசமும். | பெரும்பாலும் பசுவின் பாலும், கொஞ்சமாய்த் தாய்ப் பாலும். | தாய்ப்பால், ஆட்டின் பால், மீன் சூப்பு, எலுமிச்சம பழச் சார், கால் மேக். | சௌக்கியம். |
| 11. | சு. இ. எஸ்வின் குழந்தை, ஹிந்து, பெண், | பசுவின் பால், சாதம், தாய்ப் பால் அபூர்வமாய். | வைத்தியர் தாய்ப்பாலை நிறுத்தி விட்டார். பசுவின் பால், | 4 - வது மாசம் |

| | | | | |
|---|---|---|---|---|
| | 8 மாசம், தாய் 2 குழந்தைகளை முந்தியேப் பறி கொடுத்தவள். இறந்த குழந்தைகளுக்குக் கட்டி வரும்போதெல்லாம் தாய் கர்ப்பவதி. | | பார்லியே கொடுக்கச் செய்தார் | இறந்தது. |
| 12. | குக்கி சி. எம்மின் குழந்தை, ஹிந்து, பிராமணர் பெண், 11 மாசம். | குழந்தை பிறந்த 5-வது மாசத்தில் தாயிறந்தாள். பசுவின் பாலும், பார்லியும். | புட்டிப்பால் முதலிய அந்நிய உணவுகளும் "எமட்டீன்" என்ற மருந்தும் பீச்சுக் குழல் வழியே பீச்சப்பட்டது. | 5 - வது மாசத்தில் இறந்துவிட்டது. |
| 13. | அப்தர். ல. மு. வின் குழவி, முகம்மதியர், ஆண், 9 மாசம். | தாய் முறை (மலேரியா) சுரத்தால் அடிபட்டவள். மூலைப் பால் மிகவும் குறைவு. பசுவின் பால் விட்ட சவ்வரிசிக் கஞ்சியும் தாய்ப் பால் அபூர்வமாயும் கொடுபட்டது. | | தகவல் தெரியவில்லை. |
| 14. | காலா. உ. ர. வின் குழவி, ஹிந்து, பிராமணர் 7 மாசம். | தாய்த்திடகாத்திரி, தாய்ப்பாலும், பசுவின்பாலும், பார்லி கஞ்சியும். | பசுவின் பாலும், பார்லிகஞ்சியும் நிறுத்தி தாய்ப்பாலும் கால்மேக் என்ற மருந்தும். | பூராக் குணமடைந்தது. |

| நெ. | பெயர், மதம், சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக் கொடுத்த ஆகாரக்கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரங்களும். | முடிவு. |
|---|---|---|---|---|
| 15. | கெந்தி. ம. டு குழவி ஹிந்து, பெண், 4 மாசம். | தாய்க்குக் கிரஹணி, தாய்ப் பால், பசுவின்பால் பார்லி கஞ்சி. | தாய்ப்பால் அறவே நிறுத்தி பசுவின்பாலும் பார்லிகஞ்சியும். | 3ம் மீ சென்றிறந்தது. |
| 16. | இப்ளி. ல. ஜ குழவி, ஹிந்துஆண், 1 வயதும் 3 மாசமும். | தாய் க்ஷயரோகி, பால் கொடுக்க முடியவில்லை. ஆரம்ப முதலே மால்ட் கலந்த புட்டி உணவு. | பரதேசப்புட்டி உணவுகளே மறுபடியும் கொடுத்தது. | 4 - வது மாசத்தில் இறந்தது. |
| 17. | அச்சு, முஹம்மதிய ஆண் 9 மாசம். | தாய்த்திடசரீரி, தாய்ப் பாலுடன் பசுவின் பால். | பரதேசப்புட்டி உணகளேத் தந்தது. | 6 மாதத்தின் பின் இறந்தது. |
| 18. | கோகா. ப. டிவின் குழவி ஹிந்து ஆண், 1 வருடம் 1 மாசம். | தாய்க் கர்ப்பமானள். பால் குறைவு. பிரதானமாய்ப் பார்லி கஞ்சியும் பசுவின் பாலும், அபூர்வமாய்த் தாய்ப் பால். | ஆட்டின் பாலும், மீன் சத்தும் ஆகாரமாகவும் "கால்மேக்" என்ற மருந்தும் "உச்சி (Uche) இலைச்சாறும் கொடுபட்டது. | பூரண சௌக்கியமடைந்தது. |

| | | | | |
|---|---|---|---|---|
| 19. | ரஜனி. ம. ர குழவி. முஹம்மதிய பெண், 1 வயது 1 மாசம். | தாய்த் திடசரீரி. முக்கியமாய்ப் பசுவின் பாலும் சில சமயங்களில் தாய்ப்பாலும். | தாய்ப் பால் நிறுத்தி தனிப் பசுவின் பால் மட்டும் கொடுத்தது. | 6-வது மாசத்திலிறந்தது. |
| 20. | கரி, அ. த. குழந்தை ஹிந்து, ஆண், 9 மாதம். | பாலில்லாமல், பலஹீனத்துடன் கூடியதாய் இதற்கு முன் 3 குழந்தைகளை இவ்வியாதிக்குப் பறி கொடுத்தவள். மால்ட் கலந்த விதேசப்பெட்டி ஆகாரம் கொடுக்கப்பட்டது. | ஒரு குடும்பத்திலுள்ள ஒரு ஸ்திரீ தன் குழந்தை இறந்ததால் இக்குழந்தைக்குச் செவிலித்தாயானள். | செளக்கியப்பட்டுவிட்டது. |
| 21. | கோகா. அ. சு. குழந்தை ஹிந்து, பிராமணர், 5 மாதம். | தாய் வியாதியால் பீடிக்கப்பட்டவள். பசுவின்பாலும் பார்லியும், தாய்ப்பாலும் கொடுக்கப்பட்டது. | வைத்தியம் செய்யப்படவில்லை. | இறந்தது. |
| 22. | மணி. ந. குழந்தை. ஹிந்து, பக்ஷ், பெண் 1 வயதும் இரண்டு மாதமும். | தாய் வியாதிக்காரி, பசுவின் பாலும் அரிசிக் கஞ்சியும் கொடுக்கப்பட்டது. | கஞ்சியை நிறுத்திப் பசுவின் பால் மாத்திரம் தனியாய்க் கொடுக்கப்பட்டது. | இரண்டு மாதத்திற்குப் பிறகுஇறந்தது. |

| நெ. | பெயர், மதம், சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக் கொடுத்த ஆகாரக்கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
|---|---|---|---|---|
| 23. | துலால். எ. வி. யின் மூன்றுவது மனைவியின் 3-வது குழந்தை ஹிந்து, பிராமணர், ஆண் 9 மீ | தாய். ஏ. வி. யின் 3-வது மனைவி, அவள் முந்தின 2 குழவிகளும் இதே வியாதியாலிறந்திருக்கிறது. ஏ. வியின் 1, 2-வது தாரத்தின் குழந்தைகள் யாவும் நன்றுயிருக்கிறது, இக்குழந்தைக்குப் பசுவின் பாலும் தாய்ப்பாலும் கொடுக்கப்பட்டது. | தாய்ப்பால் நிறுத்திப் பசுவின் பால் கொடுக்கப்பட்டது. பசும்பால் மாத்திரம் தனியாய்க் கொடுக்கப்பட்டது. | நான்கு மாதத்திற்குப் பிறகு இறந்துவிட்டது. |
| 24. | சட்சு, எ.வி.யின் மூன்ருவது தாரத்தின் 4வது குழவி, ஹிந்து, பிராமணப் பெண், 10மீ | தாய்ப்பால் கொடுக்கப்படவேயில்லை. தனிப் பசுவின் பால் தான் கொடுக்கப்பட்டது, மால்ட் சேர்ந்த பரதேசப்பெட்டிப்பாலும் கொடுக்கப்பட்டது. | மால்ட் சேர்ந்த பரதேசப்பெட்டிப்பாலேக் கொடுக்கப்பட்டு வந்தது. | மூன்று மாதம் கடந்து குழந்தை இறந்தது. |
| 25. | கூகி. பி. வி. யின் குழந்தை ஹிந்து பெண் 1 | தாய் வயிற்றுப்போக்கால் தொந்தரவுக்காரி, முக்யமாய்ப் | சோற்றையும் தாய்ப்பாலேயும் நிறுத்தி பசுவின் பால் மாத் | 4 மீ கட |

| | | | | |
|---|---|---|---|---|
| | வயது 1 மீ. | பசுவின்பாலும், அரிசிக்சாகரும் கொடுக்கப்பட்டது. சிற்சில நேரங்களில் தாய்ப்பாலுமுண்டு. | திரம் கொடுப்பட்டது. | ந்து இறந்தது. |
| 26. | ஆர். ஐ. கே. யின் குழந்தை. முஹம்மதிய ஆண். 10 மாதம். | தாய்க்குப் பாலே கிடையாது. அவளின் இதர்க்குமுந்தின 1 குழந்தையும் இதே வியாதியால் இறந்திருக்கிறது. பசுவின் பாலும், பார்லி அரிசியும் கொடுக்கப்பட்டது. | மால்ட் கலந்த பெட்டிப்பால். | 3-வது மாதத்தில் இறந்தது. |
| 27. | அகிலஸ் ம. காவின் குழந்தை. முஹம்மதியன் ஆண், 2-வயதும் 3 மாதமும். | தாய் இக்குழந்தை ஒரு வயதாகும்போது இதை விட்டு விட்டு வேறொருவனுடன் கூட ஓடிப்போய் விட்டாள். சோறும் பசுவின் பாலும் கொடுக்கப்பட்டது. | கோழிக்குஞ்சு ரசமும் (Chi-cken broth) ஆட்டின் பாலும் கொடுக்கப்பட்டது. | சொஸ்தமடைந்தது. |
| 28. | எக்காரி. ல. மூவின் குழந்தை ஹிந்து. ஆண் 9 மாதம். | தாய் இதற்கு முந்தின 3 பிள்ளைகளை இதே வியாதிக்கு இரைகொடுத்தவளானபடியால் சிசு முதலே இக்குழந்தைக்கு மாவு சேர்ந்த பெட்- | அதே ஆகாரம் தொடர்ந்துகொடுக்கப் பட்டு வந்தது. | 8-வது மாதத்தில் இறந்தது. |

| நெ. | பெயர், மதம் சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக் கொடுத்த ஆகாரக்கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்துவந்த வைத்தியர்களாலேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
|---|---|---|---|---|
| | | டி ஆகாரங்கள் கொடுபட்டு வந்தது. | | |
| 29. | ஜீ. எம்.மின் குழந்தை. ஹிந்து பிராமணர் ஆண். 1 வயதும் 2 மாதமும். | தாய்திடகாத்திரி. முக்யமாய்ப் பசுவின்பாலும் தாய்ப்பால் ரொம்ப கொஞ்சமாயும் கொடுபட்டது. | தாய்ப்பாலும் ஆட்டின்பாலும் கொடுக்கப்பட்டது. | சௌக்கியப்பட்டது. |
| 30. | புலி. அ. ர. வின் குழந்தை, ஹிந்து பெண் 10 மாதம். | தாய் வெகு நாளாய் ஸ்தன்யத்தில் சிரங்கினால் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தாள். ரொம்ப வேதனையுடனிருந்தும் அதிலேயே சில நேரம் குடித்தாலும் முக்கிய ஆகாரம் பசுவின் பால். | தாய்ப்பால் நிறுத்தப்பட்டது. பசுவின்பால் கொடுக்கப்பட்டது. சில நேரங்களில் கால்மேக் மருந்தும் கொடுக்கப்பட்டது. | 3-மாதத்திற்குப் பிறகு இறந்தது. |
| 31. | கோகன். எச். எம்.மின் குழந்தை ஹிந்து பிராமண ஆண் 11 மாதம். | தாய்கெர்ப்பவதி தாய்ப்பாலும் பசுவின்பாலும் கொடுக்கப்பட்டது. | இரண்டு குழந்தைகளுக்குப் போதுமான பால் உள்ள அக்குடும்பத்தைச் சேர்ந்த | சௌக்கியப்பட்டுவிட்டது |

| | | | | |
|---|---|---|---|---|
| | | | ஒரு ஸ்திரீ இக்குழந்தைக்கு செவிலித்தாயாகவிருந்தாள். | |
| 32. | ச. ம. வின் குழந்தை, ஹிந்து, பிராமண ஆண் 1-வயதும் 6 மாதமும். | முக்கியமாய்ப் பசுவின்பாலும் இடை இடையேத் தாய்ப் பாலும். | தாய்ப்பால் நிறுத்தப்பட்டது. பசுவின்பாலும் கூவப்பொடியும். | ஓராண்டுசென்று இறந்தது. |
| 33. | பானு வ.ர. க். குழந்தை ஹிந்து ஆண். 9 மாதம். | தாய் திடகாத்தரி. முக்யமாய்ப் பசுவின்பால் சிறிதளவு தாய்ப்பால். | கழுதைப்பாலும் தாய்ப்பாலும் கொடுபட்டது. கால்மேக் மருந்தும் கொடுபட்டது. | சௌக்கியமாய்விட்டது. |
| 34. | புல்பீவி. வ. ர. வின் குழந்தை முஹம்மதியப் பெண் 1-வயது 2-மாதம். | தாய் திடகாத்தரி முக்யமாய்ப் பசுவின்பாலும் சாதமும் கொடுபட்டது, அபூர்வமாய் தாய்ப்பாலூட்டப்படும். | சரியானபடி வைத்யம் செய்யப்படவில்லை. | தகவல் தெரியவில்லை. |
| 35. | சுத்தி. உ. ஜ. வின் குழந்தை ஹிந்துபெண் 11 மாதம். | தாய் திடகாத்தரி முக்கியமாய்ப் பசுவின்பால் இடைக்கிடை தாய்ப்பால். | தாய்ப்பால் மீன் சூப்புகால்மேக். | சௌக்கியப் பட்டது. |
| 36. | லத்திப் அ. ம. வின் குழந்தை முஹம்மதிய ஆண் 1-வயது 1-மாதம். | தாய்க் கர்ப்பம், தாய்ப்பால் சில நேரங்களில், பசுவின் பால், சாதம், மாட்டு மாமிசம். | பசுவின் பாலும் பார்லி அரிசியும் மாத்திரம் கொடுபட்டது. | 3-வது மாதத்திலிறந்தது. |

| நெ. | பெயர், மதம், சாதி, எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும் குழந்தைக்குக்கொடுத்த ஆகாரக் கிரமங்களும். | சிகிச்சையும், பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
|---|---|---|---|---|
| 37. | லத்திப் ஏ.எம்.மின் குழந்தை முகம்மதிய ஆண் 1-வயது 1-மாதம். | தாய்ச் சூலாளுள், குழந்தைக்கு அரிசி சாதம், மாட்டிறைச்சி, பசுவின்பால் இவைகளுடன் சிற்சிலசமயங்களில் தாய்ப்பாலுமுண்டு. | பார்லி, பசுவின் பால் 3. மாதத்திலிருந்து. | 3-மாதத்தி விறந்தது. |
| 38. | நாணு. க. க. குழவி ஹிந்து ஆண் 11 மாதம். | தாய் வியாதிஸ்தி முக்கியமாய்ப் பசுவின்பால், அபூர்வமாய்த் தாய்ப்பால். | பசுவின் பால் மட்டும் எமிட்டின் மருந்து இன்ஜெக்ஷனும். | 3-மாதம் கடந்திறந்தது. |
| 39. | முன்னி. ல. க. குழவி முகம்மதியர் பெண் 2 வயது 2 மாதம். | தாய் 7-மாதச்சூல்காரி, சாதம், மாட்டிறைச்சி, பசுவின்பால் திதிப்பு பண்டங்கள் கொடுத்தது. | சிறிது ரொட்டியும் ஆட்டின் பாலும் மீன் சத்து, கோழிக் குஞ்சு சூப் இவைகளும் கால்மேக் என்னும் மருந்தும். | சொஸ்தமாய் விட்டது. |
| 40. | நேபு. அ. ப. குழவி ஹிந்து ஆண் 1-வரு | தாய்த் திடகாத்திரி, சவ்வரிசி கஞ்சியும் பசுவின்பாலும். | தாய்ப்பால் போல் தயார் செய்த பசுவின் பாலும் | சொஸ்தப்பட்ட |

| | | | | |
|---|---|---|---|---|
| | 2 மாதம் | அபூர்வமாய்த் தாய்ப்பால். | மீன் சூப், கோழி முட்டை, வெண் கரு, ஆரஞ்சுப் பழச்சாறு இவைகளும் கால்மேக் மருந்தும் (தாயின் பால் தானே இவ்வியாதிக்குக் காரணமெ று பயந்து சிகிச்சை செய்ய வந்த வைத்தியர் தாய்ப்பாலை நிறுத்தி விட்டார். | து. |
| 41. | கூகி. டி. ஜி. யின் முதல் மனைவியின் 3-ம் குழந்தை. ஹிந்து பிராமணப் பெண் 9 மாதம். | டி. ஜி. யின் முதல் மனைவிக்கு இதற்குமுன் இரண்டு குழந்தைகள் இறந்துபோயின. ஷையாரின் 2-ம் மனைவியின் குழந்தைகள் யாவும் திடமாயிருக்கின்றன. பசுவின் பாலும், பார்லி அரிசியும், சில சமயம் தாய்ப்பால். | தாய்ப்பால் நிறுத்தி பார்லியும் பசுவின்பாலும். | 5 - வது மாதத்திலிறந்தது. |
| 42. | பஞ்சு 41-ம் நெம்பரின் தம்பி 8 மாதம். | டாக்டர் அனுமதித்தே குழந்தை முதல் விதேசப்பெட்டி உணவளிக்கப்பட்டு வந்தது. | மறுபடியும் அதையேக் கொடுக்கப்பட்டது. | 3-மீ கடந்து இறந்தது. |
| 43. | கோ. கா ப. க. குழவி. ஹிந்து ஆண் 11 மாதம். | தாய்ச் சூலானள், முக்கியமாய்ப் பசுவின்பால். | கழுதைப் பால் காலமேக் மருந்து. | சொஸ்தமடைந்தது. |

| லெ. | பெயர், மதம், சாதி எந்த வயதில் கட்டி வந்தது முதலியவைகள். | பூர்வ சரித்திரமும், குழந்தைக்குக்கொடுத்த ஆகாரக் கிரமங்களும். | சிகிச்சையும் பார்த்து வந்த வைத்தியர்களா லேற்படுத்தின ஆகாரமும். | முடிவு. |
|---|---|---|---|---|
| 44. | ரா. மு. வ. ச. குழவி ஹிந்து ஆண் .2-வயதும் 1-மாதமும். | குழந்தைக்கு ஓராண்டு கழியும் போதே தாய் இறந்தாள். சாதமும் பசுவின் பாலும். | புட்டிப்பால், மாக்கலந்த உணவுகள். | 2 மாதம் சென்றிறந்தது. |
| 45. | பத்வா, ச. க. குழவி ஹிந்து ககார் 1-மாதம். | தாய்க் கிரஹணியினால் பீடிக்கப்பட்டாள் பசுவின்பாலும் அரிசிகஞ்சியும். | சிகிச்சை இல்லை. | இறந்து போயிற்று. |
| 46. | பஞ்சி. ப. ப. குழவி ஹிந்துபெண் 1-வயது 1-மாதம். | தாய் முறை ஜ்வரத்தினால் கஷ்டப்படுகிறாள். முக்கியமாய்ப் பசுவின் பால், சில சமயம் தாய்ப்பால். | தாய்ப்பால் ஆட்டின்பால் உச்சிச்சாறு. | சொஸ்தமடைந்தது. |
| 47. | விது க.ம. குழவி ஹிந்து ஆண் 1-வயது 3-மாதம். | தாய்ச் சீக்காளி. பசுவின் பாலும் சாதமும், அபூர்வமாய்த் தாப்பால். | மாச்சேர்ந்த பெட்டி ஆகார பசுவின் பாலும் சாதமும். | 3-மாதம் சென்றிறந்தது. |
| 48. | தாகி. வ. ந. குழவி ஹிந்து ஜீகிப் பெண் 7-மாதம். | தாய்த் திடகாத்திரி. தாய்ப்பால் சாதம் அரிசிக் கஞ்சி. | சிகிச்சை இல்லை. | 3-வது மாதம்இறந்தது. |

சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.